# தீபாவளி சிறப்பு சலுகை 01.10.10 முதல் 31.10.10






ஏழு கல்
வைரத்தோடு
ஜிமிக்கியுடன் சேர்த்து
1.00cts
தங்கத்தின் எடை 9 கிராம்
ரூ. 69,000
தள்ளுபடி விலை
ரூ. 58,000




- வைர நகைகளுக்கு Perct 4000 தள்ளுபடி
- 7 கல் வைரத்தோடு - 23000 முதல்
- வைர மூக்குத்தி 1700 முதல்
- பேன்சி வைரமோதிரம் 4500 முதல்
- பேன்சி வைரதோடு 4500 முதல்
- பேன்சி டாலர் கம்மலுடன் சேர்த்து 6500 முதல்
- அனைத்து வைரங்களும் V V S E F கலர்
- திருப்பி தரும்பொழுது வைரத்திற்கு மட்டும் 100% அன்றைய மார்கெட் விலை
- 500 முதல் 5000 வரை மாத சீட்டு + இரட்டிப்பு போனஸ்
- 15000 மேல் வாங்கும் அனைத்து வாடிக்கையாளர்களுக்கும் நகை பெட்டி வழங்கப்படும்.

## Sri Palsani Jewels

110, Dr. Radha Krishnan Road, (Near Sri Krishna Sweets) Chennai - 4
Phone: 2811 1737, 2811 7036 | www.sripalsanijewels.net

Sunday Holiday

*conditions Apply

Shiva



வருவார் விஜயகாந்த்!

- தா.பாண்டியன்



78



18

ஒரு வீடு; ஒரு கோயில்; ஒரு வள்ளல்!

- ஜ பக்கங்கள்



48

பளபளப்பாரா பகலவன் விஜய்?

# கல்கி

10.10.2010

## ஸ்பெஷல் பக்கங்கள்

'தாண்டவக்கோனே' படத்தில் கதாநாயகனாக நடித்த சஞ்சய், ஹீரோவாக நடிக்கும் படம் 'ஒரு துளிப் புன்னகை'. இப்படத்தின் தயாரிப்பாளர் பி.சி.பாலுதான் படத்தின் கதையையும் எழுதி இருக்கிறார். மனத்தால் எட்டு வயது சிறுவனாக இருக்கும் இருபத்தைந்து வயது கதாநாயகனின் உலகமும்,



# சினி சிப்ஸ்

# ரோல்

"அம்மாதான் எனக்கு ரோல் மாடல்" - நடித்த முதல் படம் வெளி வராத நிலையில் இப்படிப் பேசி யிருக்கிறார் கார்த்திகா. யார் இவர்? எண்பதுகளில் ரசிகர்களின் மனத்தில் தம் நடிப்பாலும் அழகாலும் ஓயாமல் அலையெழுப்பிய ராதாவின் மகள்தான் கார்த்திகா. கே.வி.ஆனந்த் இயக்கத்தில் 'கோ'வின் பிரதான கதாநாயகி. முத லில் அவரது இடத்தில் இருந்தவர் தமன்னா. சம்பளமும், மற்ற தேவைகளும் பூர்த்தியாகாததால் கார்த்திகாவுக்கு அடித்திருக் கிறது லக்கி பிரைஸ். தம் இடம் அம்மாவின் இடத்தைப் போல உறுதியானது என்பதைத் தம் பதிலில் வெளிப்படுத்தியிருக்கும் கார்த்திகா, நடிப்பாலும் அம்மாவைப் போல ஜொலிப்பாரா...? 'கோ' தான் சொல்லணும்.

அவனது காதலும்தான் கதையாம்.

''வால்மீகி, ஜெயமுண்டு பயமில்லை... போன்ற படங்களின் நாயகி தேவிகாதான் நாயகி என்பது எங்களின் கூடுதல் பலம்'' என்கிறார் இயக்குநர் ராஜரிஷி. ''சுப்பிரமணியபுரம் படத்தின் இசையில் திரும்பிப் பார்க்கவைத்த ஜேம்ஸ்வசந்தனின் இசையில், நா.முத்துக்குமாரின் பாடல்கள் காதுக்குள் கற்கண்டாக இனிக்கும்,'' என்கிறார் இவர்.

# ...டல்!

''பிறப்பு தரித்திரமாக இருந்தாலும், இறப்பு சரித்திரமாக இருக்கவேண்டும் - இதைச் சுற்றிதான் 'பாலுதம்பி மனசிலே' படத்தின் கதையைப் பின்னியிருக்கிறேன்'' என்கிறார் இயக்குநர் எம். ஜமீன்ராஜ். இவர் ஏற்கெனவே, 'என்னைப் பார் யோகம் வரும்', 'படிக்கற வயசுல' போன்ற படங்களை இயக்கியவர். ''அண்ணன்-தம்பி பாசமும், அவர்களைப் பிரிக்கிற காதலும் படத்தின் ஹைலைட்'' என்கிறார் இவர். முழுக்க முழுக்கப் புதுமுகங்களைக் கொண்டு எடுக்கப்படும் இப்படத்தில், ஹீரோயின் ஸ்ரித்திகா மட்டும் 'வெண்ணிலா கபடிக்குழு' படத்தில் நடித்தவர்.

- திலீபன்






# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி

பொறுப்பாசிரியர்:
ஆர்.வெங்கடேஷ்

உதவி ஆசிரியர்கள்:
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா

வடிவமைப்பு:
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு:
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு:
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு:
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு:
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்):
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

● எடக்காடு பீ.சேகர், ஊட்டி

**? முரண்டு பிடிப்பவர்களைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?**

! நல்ல காரியத்துக்கு முரண்டு பிடிப்பது தவறில்லை. 'பொய்யே பேசமாட்டேன்' என்று அரிச்சந்திரன் முரண்டு பிடிக்கவில்லையா...? எதற்காக முரண்டு பிடிக்கிறார்கள் என்று கவனிக்க வேண்டும்.

● ரேவதிப்ரியன், ஈரோடு

**? கார்த்திக் சிதம்பரம், கட்சி வளர வீட்டுக்கு ஒரு மரக்கன்று வழங்கினாராமே?**

! சத்தியமூர்த்தி பவனை சிதம்பரம் ஆதரவாளர்கள் முற்றுகையிட்டுப் போராட்டம் நடத்தியது கட்சி வளர்ச்சிக்கா? வாட்டத்துக்கா?

● பி.தர்ஷினி, குடந்தை

**? ரஷ்ய பிரதமர் விளாடிமிர் புடின், ஜிம்னாஸ்டிக் அழகியை மணக்கப் போகிறாராமே?**

! அரசியல் ஜிம்னாஸ்டிக்ஸுடன் அசல் ஜிம்னாஸ்டிக்ஸ் இணைகிறது! வாழ்த்துவோம்.

● சரா ஏ.முரளி, கள்ளக்குறிச்சி

**? எந்திரன் ரிலீஸ் அறிவிக்கப்பட்டதால் சோளிங்கர் மலைக்கோயிலில் முட்டி போட்டுப் படியேறிய ரசிகர்களைப் பற்றி...?**

! எந்திர மனிதனானால் முட்டிவலி தெரியாது! பாவம், இவர்கள்! படியேறிய வலி தீர்க்க, அவர்களுடைய தலைவர் விருந்து கொடுக்கப் போகிறாரே...! அதனால் வலியைத் தட்டிவிட்டு விடுவார்கள். அபிமானம் இருக்க வேண்டியதுதான். ஆனால் இது டூ மச்!

● எஸ்.கதிரேசன், பேரணாம்பட்டு

**? அ.தி.மு.க. பேச்சாளர்கள் முதல் ஜெயலலிதா வரை, முதல்வர் கருணாநிதியை மிகவும் கொச்சையாகப் பேசுகிறார்களே...?**

! நீங்கள் தி.மு.க.கூட்டங்களுக்குப் போனதில்லையா?

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

**? தஞ்சைக் கோயிலின் ஆயிரமாவது ஆண்டு விழா நிறைவு எப்படி...?**

! பெரிய கோயிலின் சிறப்புகளைக் கல்வெட்டு ஆய்வாளர்களும் தமிழ் அறிஞர்களும் எடுத்துரைத்த விதம் அருமை. இசை நிகழ்ச்சிகளும் நாடக நிகழ்வுகளும் தெளிவுற இருந்தன. ஆயிரம் பேர்களின் நடன நிகழ்ச்சி நன்கு திட்டமிடப்பட்டிருந்தது. அரசியல் கலப்பையும் மீறி ராஜராஜன் பிரகாசித்தார்.

* அமெரிக்க விருது!



# மன்மோகன் சிறந்த நிர்வாகியாமே?

● வி.ஆனந்தகிருஷ்ணன், சென்னை - 101

**? ராகுல் காந்தியுடன் எஸ்.வி.சேகர் சந்திப்பு பற்றி..?**

! அந்தப் பழமும் புளித்தால் என்ன செய்வாரோ!

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

**? மக்களின் அனைத்து எதிர்பார்ப்புகளையும் ஆட்சியாளர்களால் நிறைவேற்ற முடியாது என்கிறாரே மு.க.ஸ்டாலின்?**

! கரெக்ட். உண்மைதான் பேசவேண்டும்; லஞ்ச - ஊழல் கூடாது... மக்கள் இப்படியெல்

* இளம் கன்று...!



✱ அசட்டு அபிமானம்!

லாம் எதிர்பார்க்கத்தான் செய்கிறார்கள். என்ன செய்வது?


✱ அற்புத அங்கதம்!

● எஸ். ஜெயகாந்தன், புன்செய் புளியம்பட்டி

? தி.மு.க.வின் ஊக்க சக்தி, ஆக்க சக்தி கலைஞர் என்கிறாரே குஷ்பு?

! ஸாரி, அவருக்கு தி.மு.க.வின் வரலாறு தெரியாது என்பது தெளிவாகிறது.

● எஸ். பக்கிரிசாமி, புதுச்சேரி

? அயோத்தி இடப்பிரச்னை தொடர்பான தீர்ப்பைத் தள்ளிவைக்குமாறு உச்சநீதிமன்றம் பிறப்பித்த உத்தரவுக்குப் பின்னணியில் மத்திய அரசு செயல்பட்டுள்ளதாக விச்வ ஹிந்து பரிஷத் தலைவர் குறிப்பிட்டுள்ளது பற்றி...?

! நக்ஸல் தலைவலி, காஷ்மீர் மண்டை இடி; காமன்வெல்த் விளையாட்டுகள் கால்வலி என்று தவிக்கும் மத்திய அரசு, மற்றொரு முதுகு வலியின் தோற்றத்தை ஒத்திப்போட நினைத்திருந்தால் அதற்கான மனுவை உச்சநீதிமன்றத்தில் தானே தாக்கல் செய்திருக்குமே? மூன்றாவது நபரைத் தூண்டிவிட அவசியமில்லையே!

● அ. சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21

? சர்வதேச அளவில் பல வகைகளிலும் சாதனை படைத்துவரும் நம்மால், ஒரு விளையாட்டுப் போட்டியைக் (காமன்வெல்த்) கூடவா அழகாக நடத்தி வைக்க முடியாது?

! ஏன் முடியாது? லஞ்ச - ஊழலுக்கு இடம் கொடாத வகையில் யோசித்து, திட்டமிட்டு, செயல்பட்டிருந்தால் உலகம் வியக்க நடத்தியிருக்கலாம்.

இப்போதோ, 'ஆமை புகுந்த வீடும் அரசியல்வாதி புகுந்த துறையும் உருப்படாது' என்பது மீண்டும் ஒருமுறை நிரூபணமாகியுள்ளது!

● த.சேதுராமன்,
கணபதி அக்ரஹாரம்

? 2010-ல் இதுவரை வந்த தமிழ்த் திரைப் படங்களுள் நீங்கள் ரசித்த படம் எது? ஏன்?

! இரும்புக்கோட்டை முரட்டுச் சிங்கம். சிம்புதேவனின் அங்கதம் அற்புதம். களைப் பூட்டிய கிளைமேக்ஸை ஒதுக்கிவிட்டால், முழுக்க முழுக்கக் களிப்பூட்டிய படைப்பு. சிரிப்போடு சிந்தனையையும் தூண்டிய அபூர்வ படம்.

● கோதை ஜெயராமன்,
மீஞ்சூர் ★

? கன்னியாகுமரியில் நடைபெற்ற தி.மு.க. முப்பெரும் விழாவில் மேடை முன்வரிசையில் குஷ்புவை அமர வைத்து, முக்கிய தலைவர்களை, தரை இருக்கையில் அமர்த்தியது நாகரிகமா?

! மேடையில் யார் யாருக்கு வேலை இருக்கிறதோ அவர்கள் மேடை ஏறுகிறார்கள். மற்றவர்கள் பெருந்தலைவர்கள் எனினும் தரை இருக்கையில் அமர்கிறார்கள். இதில் தவறு ஏதும் இல்லையே! பெருமையும் சிறுமையும் பிறர் வழங்கிப் பெறுவதல்ல.

● லெ.நா.சிவகுமார்,
மேற்கு மாம்பலம்

? உலகின் சிறந்த நிர்வாகி நமது பிரதமர் மன்மோகன் சிங் என்று அமெரிக்க அமைப்பு விருது வழங்கியுள்ளது பற்றி?

! "நிர்வாகி" என்றுதான் விருது. "அரசியல்வாதி" என்றல்ல; "பிரதமர்" என்றுமல்ல! ஒரு காலத்தில் மிகச் சிறந்த (பொருளாதார) நிர்வாகியாக விளங்கியவர்தான் நம் பிரதமர்!

● ரா.பாலாஜி,
ஜமீன் பல்லாவரம்

? தபால் அலுவலகத்தில் முதியோர் ஓய்வூதிய ஊழல் எத்தனை அவமானம்? மத்திய அரசு சம்பளம் பெறும் ஊழியர்கள் இப்படிச் செய்யலாமா?

! அவமானத்தைவிட, ஓய்வூதியத்தையே நம்பி இருக்கும் முதியோர்களின் நம்பிக்கையில் விழுந்த பேரிடி இது. ராசா எவ்வழியோ அவ்வழியே ஊழியர்களும்!



★ இணையும் ஜிம்னாஸ்டிக்ஸ்



★ தெரியாத...



★ ...வரலாறு

☐ ரூ.150/- பரிசு பெறுபவர்:
த.சத்தியநாராயணன், அயன்புரம்

★ ரூ. 75/- பரிசு பெறுபவர்:
கோதை ஜெயராமன், மீஞ்சூர்

உங்கள் கேள்விகளை 'தராசு' என்று குறிப்பிட்டு
kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்போனில்,
KAGQA என்று டைப் செய்து ஒரு ஸ்பேஸ் விட்டு, உங்கள் கேள்வி,பெயர்,
ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.

# லோன் வாங்கலியோ!

'ஸ்கூட்டர், மோட்டார் பைக் வேணுமா? அதிகமில்லை ஜென்டில்மென் ஆயிரத்தியோரு ரூபாய் கட்டினால் போதும்; ஷோரூமுக்கு நடந்து வாங்க! வீட்டுக்கு ஜாலியா பைக்ல போங்க' இந்த மாதிரியான விளம்பரங்கள் இன்று வெகு சகஜமாகிவிட்டன. இன்று பல வாகன விற்பனையாளர்கள் தம் விற்பனையை அதிகரிக்க, பல்வேறு வங்கிகள், தனியார் நிதி நிறுவனங்களுடன் புரிந்துணர்வு ஒப்பந்தம் செய்துகொண்டு வாடிக்கையாளர்களின் கடனுதவிக்கு ஏற்பாடு செய்கிறார்கள். பொதுத்துறை வங்கிகளும் தங்கள் வாடிக்கையாளர்களுக்கு வாகனக் கடன்கள் வழங்குவதில் ஆர்வம் காட்டுகின்றன. மாதாந்திர சம்பளக்காரரிடம் சம்பளச் சான்றிதழ், சொந்தத் தொழில் செய்பவர் வருமானவரி ரிட்டர்ன் பிரதி இவற்றுடன் சென்றால், சின்ன என்கொய்ரிக்குப் பிறகு வாகனக் கடன் கொடுக்க முன்வருகிறார்கள். வங்கியை அணுகி, வாகனத்துக்காக கடனுதவி பெறலாம். புதிய வாகனங்களுக்காக மட்டுமில்லாமல் செகண்ட்ஹேண்ட் வாகனங்களுக்குக்கூட கடன் வசதி தருகிறார்கள்.

"புதிய டூ வீலரோ, காரோ வாங்கும் போது, அதன் விலையில் 90 சதவிகிதம் வரை கடன் கிடைக்கும். பழைய வாகனங்களுக்கு 75 சதவிகிதம் கடன் கிடைக்கும். புதிய வாகனக் கடன்களை 60 மாதங்களிலும், பழைய வாகனங்கள்



36 மாதங்களிலும் கடனைத் திரும்பச் செலுத்த வேண்டும். எங்கள் வங்கியில் வாகனக் கடனுக்கு வட்டி இப்போது 11.25 சதவிகிதம். எல்லாப் பொதுத்துறை வங்கிகளிலும் இதேமுறைதான். வாடிக் கையாளர் கட்ட வேண்டிய மார்ஜின் தொகையை முதலில் அவர் வங்கியில் செலுத்த வேண்டும். அதன் பிறகு, வாக னத்தின் விலைக்குரிய தொகைக்கு விற் பனையாளரின் பெயரில் வங்கிக் காசோ லையை வழங்குவதுதான் வழக்கம்'' என்கிறார் சென்னை நுங்கம்பாக்கம் ஐ.ஓ.பி. கிளையைச் சேர்ந்த ராஜசேகரன்.

''யாருக்கு வேண்டுமானாலும் வாக னக் கடன் கொடுத்துவிடுவீர்களா?'' என் றால், வாங்கப் போகிற வாகனக் கட னுக்கான மாதாந்திரத் தவணை உட்பட எல்லாம் சேர்ந்து மொத்த சம்பளத்தில் 50 சதவிகிதத்துக்கு மேல் போகக்கூடாது என்ற விதியைக் கடுமையாகக் கடைப் பிடிக்கிறோம். ஒரு வாடிக்கையாளரால், கட னைத் திரும்பச் செலுத்த முடி யும் என்று தெரிந்தால், விண் ணப்பித்த ஒரேநாளில் வாக னக் கடன் வழங்கிவிடுகிறோம். இப்போதெல்லாம் வங்கிகள் இரண்டு சக்கர வாகனங்களுக் குக் கடன் கொடுப்பதைவிட, அதிக அளவில் கார் லோன் கொடுக்கவே விரும்புகிறார்கள். அதனால், இரண்டு சக்கர வாகனக் கடன்களில் தனியார் ஃபைனான்ஸ் கம்பெனிகள் முக்கிய பங்கு வகிக்கின்றன. ஆனால் என்ன? இவர்களிடம் வட்டி கொஞ்சம் கூடுதல்.




கடனில் வாகனங்கள் வாங்கும்போது அவற்றின் பதிவுச் சான்றிதழில் (ஆர்.சி) வாகனம் இன்ன வங்கிக்கு அல்லது நிறு வனத்துக்கு ஹைறப்பாதிகேஷன் செய்யப் பட்டுள்ளது என்று கட்டாயமாகக் குறிப் பிட வேண்டும். அதேபோல, கடன் முழுமையாகத் திருப்பிச் செலுத்தப்பட்ட பிறகு, இந்த ஹைறப்பாதிகேஷன் குறிப்பு நீக்கப்பட வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், வாகனத்தை விற்கும்போது சிக் கல் ஏற்படும்.'' என்கிறார் அவர்.

## கடனைத் திருப்பிச் செலுத்தாவிட்டால்?

''கார் லோன்களைவிட இரண்டு சக் கர வாகன லோன்கள்தான் ஒழுங்காகத் திருப்பிச் செலுத்தப்படுவதில்லை. தனி யார் வங்கிகள் மற்றும் ஃபைனான்ஸ் கம் பெனிகளில் கடன் தவணையைத் திரும் பச் செலுத்தத் தவறினால் கலெக்ஷன் ஏஜென்ட்கள் வீடு தேடி வந்து கழுத் திலே துண்டு போடுவார்கள். 'வண்டி யைத் தூக்கிடுவேன்' என்று மிரட்டு வார்கள். பொதுத்துறை வங்கிகளில் கெடுபிடிகள் அவ்வளவாக இல்லை.'' என்கிறார் ராஜசேகரன்.

**- எஸ்.சந்திரமௌலி**

## என்ன வட்டி?

ஐசிஐசிஐ வங்கி:13.75%, ஆக்ஸிஸ் வங்கி : 14%, ஹெச்.டி.எஃப்.சி வங்கி: 15%, பொதுத்துறை வங்கிகளில் இதை விட வட்டி குறைவு.

## உஷார்!

* பிராசஸிங் கட்டணம், லோன் தொகையில் 4 சதவிகிதம்வரை கேட் கப்படலாம். * லோனைக் குறிப்பிட்ட காலத்துக்கு முன்பே கட்ட முயற்சிக் காதீர்கள். ப்ரீ-பேமெண்ட் பெனாலிட்டி, மிச்சத் தொகையில் 2 - 5 சதவிகிதம் வரை வசூலிக்கப்படலாம். * மாத லோன் தவணையைச் சரியான நேரத் துக்குச் செலுத்திவிடுங்கள். 2.5 சத விகிதம் வரை தாமதக் கட்டணம் தீட் டப்படலாம்.

ந. முராரி, சேலம்

நான் ஓய்வு பெற்றுவிட்டேன். பென்ஷன்தான் வாங்குகிறேன். எதில் முதலீடு செய்தால் எதிர் காலத்தில் நல்ல தொகை கிடைக்கும் என்று சொல்கிறீர்களா?

உங்களது ஓய்வூதியம் அன்றாட வாழ்க்கைச் செலவுகளுக்குப் போதுமானதாக இருக்கும் என நினைக்கிறேன். ஆகவே, நீங்கள் முதலீடு செய்ய நினைப்பது ஏற்கெனவே சேமித்து வைத்த தொகை மற்றும் இனிமேல் சேமிக்கும் தொகை இவையாக இருக்கும் என கணிக்கிறேன். உங்கள் வயதைக் கருத்தில் கொண்டு பார்த்தால் உங்கள் முதலீடுகள் அதிக ரிஸ்க் இல்லாதவையாக இருக்க வேண்டும். ஆகவே, உங்களுடைய சேமிப்பில் 60 சதவீதத்தைத் தங்களுக்கு ஏற்படக்கூடிய எதிர்பாராத உடனடி

**உங்கள் கேள்விகளை 'மூலதன மந்திரம்' என்று குறிப்பிட்டு அனுப்பலாம். kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். செல்ஃபோனில் KAFIN என்று டைப் செய்து, ஒரு ஸ்பேஸ் விட்டு, கேள்வி, பெயர், ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கு எஸ்.எம்.எஸ்.செய்யலாம்.**

செலவுகளுக்காக வங்கிகளின் பிக்சட் டெப்பாசிட்டுகளிலும், மீதி உள்ள பணத்தை மூன்றாகப் பிரித்து அதில் ஒரு பங்கை, குறைந்த ரிஸ்க் உள்ள ரெகுலரான வருமானத்தைத் தரக்கூடிய மியூச்சுவல் ஃபண்டிலும், மற்றொரு பங்கை எக்சேஞ்ச் டிரேடட் கோல்ட் பண்டிலும் மற்றொன்றை பங்குச் சந்தையின் இண்டெக்ஸ்களை கணக்கில்கொண்டு செயல்படும் இண்டெக்ஸ் ஃபண்டுகளிலும் முதலீடு செய்யலாம். இந்தச் சந்தைசார் முதலீடுகளில் இறங்கும்போது நல்ல அனுபவமிக்க ஒரு முதலீட்டு ஆலோசகரைக் கலந்து கொள்வது நல்லது.



டி.பாலசுந்தரம்

ஆர். பாலாஜி, நெய்வேலி

எதிர்காலத்தில் புளுசிப் நிறுவனமாக மாறும் என்று எப்படி ஒரு நிறுவனத்தைக் கணிப்பது?)

1.போட்டிகள் அதிகம் இல்லாத துறைகளில் செயல்பாடு;

# உங்களோடதது புளூ சிப்

## மூலதன மந்திரம்

2. புதிய போட்டிகள் உருவாகத் தடைகள் உள்ள துறையில் ஈடுபாடு;

3. கிடைக்கும் வாய்ப்புகளைப் பயன்படுத்திக்கொள்ளும் திறமையான நிர்வாகம்;

4. தொழில் விரிவாக்கத்துக்குத் தேவையான பணம் சேர்த்துக் கொள்ளும் வலிமை;

5. வாடிக்கையாளர்களிடம் நல்ல பெயர்;

6. முதலீட்டாளர்களின் நலனைப் பாதுகாக்கும் மனப்பான்மை.

7. பெரிய அளவில் செயல்படுதல்

இவற்றைக் கொண்ட நிறுவனம்தான் எதிர்காலத்தில் புளூசிப் ஆக வாய்ப்புடைய கம்பெனியாகும்.



# செம்மை அல்வா!

தஞ்சைப் பெரிய கோயில் ஆயிரமாவது ஆண்டு நிறைவு விழாப் பேருரையில், தமிழக முதல்வர் மு.கருணாநிதி ஓர் அறிவிப்பை வெளியிட்டார். "ஒருமுறை வேளாண் துறை அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம் என்னிடம், 'இந்த நெல் செம்மையாக விளைகிறது, இதற்கு என்ன பெயர் வைக்கலாம் எனக் கேட்டார்,' செம்மையாக விளைவதால், செம்மை நெல் என்றே பெயர் வைத்துக் கொள்ளுமாறு கூறி, அப்போது அதற்குச் செம்மை நெல் எனப் பெயரிட்டேன். தற்போது தஞ்சைப் பெரிய கோயில் ஆயிரமாவது ஆண்டு விழாவையொட்டி, அக்கோயிலைக் கட்டிய இராஜராஜனின் பெயர் தினந்தோறும் மக்கள் மனத்தில் உணவு உண்ணும் போதெல்லாம் எண்ணி மகிழ்வுறும் வகையில் இராஜராஜன் 1000 எனப் பெயரிடுகிறேன்!" என அறிவித்தார்.



சி.சந்திரகுமார்





ஜெயராமன்

"செம்மை நெல் என்பது நெல்லின் பெயர் அல்ல; அது ஒரு சாகுபடி முறை. அதற்கு இராஜராஜன் 1000 எனப் பெயரிடுவதால், எவ்விதப் பயனும் இல்லை. தமிழகத்தில் கடந்த முப்பது ஆண்டுகளுக்குள் பரவலாகப் பயிரிடப்பட்டு வருவதே செம்மை நெல் சாகுபடி. இன்னும் எத்தனை ஆண்டுகளுக்கு இந்தச் சாகுபடி முறை நீடித்திருக்கும் என்பதற்கு உத்தரவாதம் ஏதுமில்லை. இதனைவிட அதிக மகசூல் அள்ளித் தருகிற வேறொரு சாகுபடி முறை அறிமுகமாகும்போது, செம்மை நெல் (எ) இராஜராஜன் 1000 இயல்பாகவே மறைந்து போய்விடும். கடந்த காலங்களில் பயன்பாட்டில் இருந்த நெல் - அரிசி வகைப் பெயர்களில் பலவும், தற்போது காணவில்லை. ஐ.ஆர்.8 ஐயும், ஆடுதுறை 27 ஐயும் க்ராஸ் செய்து உருவானது கோ33. அதற்கு தி.மு.க. ஆட்சி காலத்தில் 1971-ல் 'கருணா' எனப் பெயரிட்டது தமிழக அரசு. தற்போது தமிழகத்தில் 'கருணா' என்கிற அந்த நெல் வகை எங்குமே பயன்பாட்டில் இல்லை!" என்கிறார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலக்குழு உறுப்பினர் சி.சந்திரகுமார்.

"தமிழக முதல்வரின் அந்த அறிவிப்பு

மடகாஸ்கர் நாட்டிலிருந்து இறக்குமதியானது இந்தச் செம்மை நெல் சாகுபடி. கிறிஸ்தவ பாதிரியார் லவ்லோனி தமது ஆராய்ச்சியின் மூலம் அறிமுகப்படுத்தியது இந்தச் செம்மை நெல் சாகுபடி முறை. குறைந்த அளவில் விதை, நாற்றங்கால், இடுபொருள், பாசனத் தண்ணீர் இவற்றைக் கொண்டு மிக அதிக அளவு மகசூலை அள்ளித் தந்ததே இந்தச் சாகுபடி முறையாகும். ஒற்றை நாற்று எனப்படும் திருத்திய நெல் சாகுபடி என்றே தமிழகத்தில் 1982-ல் இது அறிமுகப்படுத்தப்பட்டது. கடந்த இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் தான், இதனைச் செம்மை நெல் சாகுபடி எனத் திருத்தியமைத்தார் தமிழக முதல்வர். தற்போது மீண்டும் அதனை இராஜராஜன் 1000 எனப் பெயர் அறிவித்துள்ளார்.

தமிழக விவசாயிகளுக்கு ஏமாற்றத்தையே தந்துள்ளது. வேளாண் பல்கலை அளவில் உருவான பதினெட்டு வகை நெல்களும், பாரம்பரிய நெல் வகைகளில் நூற்றிப்பதினான்கு வகை நெல்களும்தான் தற்போது தமிழகத்தில் பயிரிடப்படுகின்றன. இந்த நிலையில் பிற்காலத்தில் மாறிவிடக்கூடிய ஒரு சாகுபடி முறைக்கு இராஜராஜன் 1000 எனப் பெயரிட்டிருப்பது ஒருவித ஏமாற்று அறிவிப்பே. தமிழக விவசாயிகள் அனைவரும் பயன்பெறும் வகையில் புதிதாக ஒரு திட்டம் உருவாக்கி, அதற்கு இராஜராஜன் 1000 எனப் பெயர் சூட்டியிருந்தால் தமிழக அரசுக்கும் பெருமை; தமிழக முதல்வருக்கும் பெருமை சேர்ந்திருக்கும்!'' என்கிறார் தேசிய அளவில் இயங்கி வரும் 'நமது நெல்லைக் காப்போம்' என்கிற அமைப்பின் தமிழக ஒருங்கிணைப்பாளரான திருத்துறைப் பூண்டி ஜெயராமன்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



# கல்கி




2010 அக்டோபர் 10
விக்ருதி புரட்டாசி 24
மலர் : 69
இதழ் : 11


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## காமன்வெல்த் போட்டிகள்: தொடங்கும் முன்பே தோல்வி!

"**கா**மன்வெல்த் போட்டிகளுக்கான ஏற்பாடுகளில் நடந்துள்ள குளறுபடிகளுக்குப் பொறுப்பேற்கிறேன்... அவை வெற்றிகரமாக நடந்து முடிந்த பிறகு அதற்கான நற்பெயரும் எனக்கு உரியதாகும் என எதிர்பார்க்கிறேன்..." - சுரேஷ் கல்மாடியின் நம்பிக்கை வாசகம் இது!

அவரது நம்பிக்கையை வழிமொழியத்தான் ஆளில்லை! காமன்வெல்த் போட்டி ஏற்பாடுகள் திருப்திகரமாக இல்லை என்பதை அறிந்து ஏற்கெனவே பல நாடுகளின் முன்னணி விளையாட்டு வீரர்கள் போட்டிகளிலிருந்து விலகிக் கொண்டுவிட்டனர். தில்லி முதல்வர் ஷீலா தீக்ஷித், "விளையாட்டு வீரர்கள் தங்கும் கிராமம் எப்போது சீர் செய்யப்பட்டுத் தயாராகும் என்று சொல்வதற்கில்லை," என, போட்டி தொடங்க ஐந்து நாட்களே உள்ள தருவாயில் கூறுகிறார்! போட்டிகளை யார் துவக்கி வைப்பது - இந்தியக் குடியரசுத் தலைவரா அல்லது பிரிட்டிஷ் அரசியின் பிரதிநிதியான சார்லஸ் இளவரசரா...? என்பதில் கூட சர்ச்சை!

போட்டியாளர்கள் குடியிருப்புகளிலும் ஸ்டேடியம்களிலும்

வகை வகையான குறைபாடுகள்; விதவிதமான அபாயங்கள்! நாய், குரங்கு, பாம்புகளின் நடமாட்டம் தொடங்கி, கூரை, பாலம் இடிந்து விழுவது வரை; கட்டிடக் கழிவுகள் அகற்றப்படாதது முதல் கழிப்பறைகள் சுத்தமின்மை வரை சர்வதேச வீரர்களின் அதிருப்தியைத் தூண்டியிருக்கின்றன.

இந்த லட்சணத்தில், போட்டி முடியும்போது கல்மாடி எந்தப் பெருமைக்கு உரிமை கொண்டாடப் போகிறார்?!

காமன்வெல்த் போட்டிக்கான கட்டட ஒப்பந்தங்கள், பணி ஒப்பந்தங்களில் லஞ்ச - ஊழல் நடந்திருப்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெரிகிறது. பணிகள் தாமதமாகி வருவதைத் தாம் சுட்டிக்காட்டி ஓராண்டுக்கு முன்னரே எச்சரித்ததாக காமன்வெல்த் விளையாட்டுகள் கூட்டணி அமைப்பின் தலைவர் மைக் ஃபென்னல் கூறுகிறார். ஆனால், நிர்வாகக் குழு தலைவர் சுரேஷ் கல்மாடியோ ''விளையாட்டு வீரர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள்,'' என்கிறார்!

தவறுகள், குற்றங்கள், தாமதங்கள் பற்றிய வருத்தமோ, தலைகுனிவோ, குற்ற உணர்வோ அரசுத் தரப்புக்கு இம்மியும் இல்லை. இதைப் பார்க்கையில், இந்த விளையாட்டுப் போட்டிகளை நடத்த முண்டியடித்துப் போட்டி போட்டதே ஊழல் மூலம் அவரவரும் சம்பாதிக்கத்தான் என்கிற குற்றச்சாட்டு வலுப்பெறுகிறது.

பிரதமர் தலையிட்ட பிறகும் (மிகத் தாமதமாக) எதையும் பெரிய அளவில் சீர் செய்ய முடியாமல் இருப்பதற்குக் காரணம், ஏற்பாடுகளைச் சீராகவும் தாமதமின்றியும் செய்ய வேண்டும் என்ற அடிப்படை நோக்கமின்றி அரசுத் தரப்பு இவ்வளவு காலமாக இயங்கியதுதான்.



# 1000 கலைஞர் நடனம்



இதே போட்டிக்கான ஏற்பாடுகளை, முன்னணி தனியார் நிறுவனங்களிடம் பிரித்து ஒப்படைத்திருக்கலாம். அவை பெருமிதத்துடன், தங்கள் நற்பெயரைக் காத்துக் கொள்ளும் நோக்கில் செயல்பட்டு, சர்வதேசத் தரத்தில் அனைத்தையும் குறித்த நேரத்தில் அமைத்துக் கொடுத்திருக்கும். பகுதியளவில் ''ஸ்பான்ஸர்ஷிப்''பாகக் கூட அமைந்திருக்கக்கூடும். ஏதேனும் குறைபாடுகள் இருப்பின், தட்டிக்கேட்கும் அதிகாரமும் அரசுக்கு இருந்திருக்கும். இப்போது, விரைவில் நிலைமையைச் சீர்செய்ய, முன்னணி நட்சத்திர ஹோட்டல்களின் ஹவுஸ் கீப்பிங் நிபுணர்களுடைய உதவியைத் தானே அரசு அவசரமாக நாடியிருக்கிறது!

ஆனால், பெயர்பெற்ற தனியார் நிறுவனங்கள் வசம் பொறுப்பை ஒப்படைத்திருந்தால், பல்வேறு ஒப்பந்தங்கள் வழங்குவதில் அரசுத் தரப்பில் பல்வேறு நபர்கள் பணம் பண்ணியிருக்க முடியாதே!

'வாய்மையே வெல்லும்' என்ற தேசிய வாசகத்தைக் குழி தோண்டிப் புதைத்துவிட்டு அழுகுணி ஆட்டம் ஆடியிருக்கிறார்கள்!

ஓரிரு இந்திய வீரர்கள், வீராங்கனைகள் இந்தப் போட்டிகளில் ஜெயிக்கக் கூடும்... ஆனால் இந்தியா ஏற்கெனவே தோற்றுவிட்டது!

**தீபாவளி**  **தீபாவளி**

# அன்பான வேண்டுகோள்







தீபாவளி திருநாளில் பொது மக்கள் அனைவரும் மகிழ்ச்சியுடன் கொண்டாட குருகுலத்தில் உள்ள 250 குழந்தைகளும், 100 முதியோர்களும் இறைவனை பிரார்த்திக்கிறோம். பண்டிகைகளும் விழாக்களும் வேற்றுமை நீங்கி உறவுகள் ஒன்றுபட மகிழ்ச்சியுடன் கொண்டாடப்படுகிறது. எங்களுக்கு தாய், தந்தை ஸ்தானத்தில் இருந்து இவ்வருட தீபாவளியை கொண்டாட உதவியை பணமாகவோ அல்லது புத்தாடைகள், பட்டாசுகள், இனிப்பு, எண்ணெய், சீயக்காய் போன்ற பொருட்களாகவோ அரிசி, கோதுமை போன்ற தானிய வகைகளாகவோ நன்கொடையாக கொடுக்கலாம்.

தாங்கள் அன்புடன் நன்கொடைத் தொகையினை காசோலையாகவோ / டிராப்டாகவோ **சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்** என்ற பெயரில் அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

அனுப்ப வேண்டிய முகவரி
**பொதுச்செயலாளர்**
**சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்**
நெ.20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம்,
சென்னை - 600 059
தொலைபேசி எண்: 2239 2444
2239 1078

சென்னையில் நன்கொடை கொடுக்க வேண்டிய முகவரி
**M/s. பிரகாஷ் டிரேடிங் கம்பெனி**
நெ.156, தம்பு செட்டி தெரு,
சென்னை - 600 001
தொலைபேசி எண்: 2534 2803

**சிவானந்த குருகுலம்**
காட்டாங்கொளத்தூர் - 603 203, காஞ்சிபுரம் மாவட்டம்
போன்:27452345, 2745 1815

**பின் குறிப்பு:** நன்கொடையைக் காசோலையாகவோ / டிராப்டாகவோ **சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்** என்ற பெயரில் அனுப்ப வேண்டும் என்பதை கேட்டுக் கொள்கிறோம். நன்கொடைகளுக்கு வருமான வரிவிலக்கு உண்டு.

I.T. Exemp No DIT (E) No.2039(88) 86-87
Dt.30.06.2009
Pan No.AAA TSO 160 K

Email:sivanand@md2.vsnl.net.in
Web:www.buildhope.org



# ஞாநி

முதல்வர் கலைஞர் கருணாநிதி கோபாலபுரத்தில் தாம் வசித்துவரும் வீட்டைத் தம் காலத்துக்கும் தம் மனைவி தயாளு அம்மாள் காலத்துக்கும் பிறகு பொது மருத்துவமனையாக ஆக்குவதற்கு நன்கொடையாக அளித்ததை, உலக மகா தர்மமாக அவர் கட்சியினரும் துதிபாடிகளும் வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். ஏதோ அவர் இப்போதே வீட்டைக் கொடுத்துவிட்டு நடுத்தெருவில் நின்றபடி இனி எந்த வீட்டில் போய் வாழ்வது என்ற நிலை ஏற்பட்டுவிட்ட தியாகத்தைச் செய்திருப்பது போல சித்திரித்துக் கொண்டிருக்கிறார்கள்.

கோபாலபுரம் வீட்டைத் தானமாகத் தருவதாக கருணாநிதி அறிவித்தபோது, அந்த அறிக்கையில் ஒரு தகவல் சுவாரஸ்யமாக இருந்தது. அந்த வீட்டை அவர் 1968லேயே தம் மகன்கள் அழகிரி, ஸ்டாலின் முதலானோருக்கு செட்டில் செய்துவிட்டதாகவும் இப்போது தானமாகத் தருவதற்கு அவர்கள் மனமுவந்து சம்மதம் தந்திருப்பதாகவும் தெரிவித்திருந்தார். ஆச்சரியமாக இருந்தது. 1968ல் கருணாநிதிக்கு வயது 44தான். சொத்தை மகன்களுக்கு செட்டில் செய்யவேண்டிய முதுமையான வயது அல்ல. அதுவும் கோபாலபுரம் வீடு அவர் சம்பாதித்து வாங்கிய முதல் வீடு. ஏன் அப்போதே மகன்களுக்குக் கொடுத்தார் என்று யோசித்தால், அந்த வருடம்தான் துணைவியின் மூலம் வாரிசாகக் கனிமொழி பிறந்தார் என்ற தகவல் தெரியவந்தது.

இப்போது அந்த வீட்டைத் தானமாகக் கொடுப்பதால் கருணாநிதியின் குடும்பங்களுக்கு எந்தப் பேரிழப்பும் இல்லை. அரசியலில் கடுமையாக உழைத்துச் சம்பாதித்து பேரன் பேத்திகள் வரை எல்லோருக்கும் தனித் தனியே சொந்த வீடுகள் வாங்கும் வசதிகள் வந்தாயிற்று.



ஒரு வீட்டைத் தானமாகக் கொடுத்ததற்குக் கூரை மீது ஏறி நின்று கூவுகிற விசித்திரத்தைப் பார்க்கும்போது, அந்த கோபாலபுரம் வீட்டுக்கு விஜயம் செய்த பிரபலங்களில் ஒருவரின் ஞாபகம் வருவதைத் தவிர்க்க முடியவில்லை.

அவர் பெயர் பில் கேட்ஸ்.

உலகத்தில் ஏற்பட்ட கணினிப் புரட்சியில் பெரும் உந்து சக்தியாக இருந்த மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தை உருவாக்கிய அதே பில்கேட்ஸ்தான். இன்று உலகத்தின் மிகப் பெரும் பணக்காரர்களின் முதல் வரிசைப் பட்டியலில் இருப்பவர் பில்கேட்ஸ்.

பில்கேட்ஸைச் சந்தித்தபோது என்ன பேசினீர்கள் என்று நிருபர்கள் கருணாநிதியைக் கேட்டார்கள். அவரோடு சேர்ந்து வியாபாரம் செய்வதைப் பற்றிப் பேசினேன் என்று 'நகைச்சுவையாக' (!) பதிலளித்தார் கருணாநிதி. நல்லவேளை வியாபார பேரம் நடக்கவில்லை. நடந்திருந்தால், மைக்ரோசாஃப்ட், சன் குழுமத்தில் ஒன்றாக

ஆகிவிட்டிருக்கும் ஆபத்து ஏற்பட்டிருக்கலாம்!

அப்போது பில்கேட்ஸ் இப்போது அறிவித்திருக்கும் அறிவிப்பைச் செய்யும் வாய்ப்பே ஏற்படாமல் போயிருக்கலாம். தாமும் தம் மனைவி மெலிண்டாவும் உயிரோடு இருக்கும்போதே தங்கள் சொத்தில் பெரும் பகுதியை, பொதுக்காரியங்களுக்கு நன்கொடையாகக் கொடுத்துவிடப் போவதாக பில்கேட்ஸ் அறிவித்தார்.

பில்கேட்ஸின் மொத்த சொத்து மதிப்பு 53 பில்லியன் டாலர்கள். ஏற்கெனவே இதில் 23 பில்லியன் டாலர் சொத்துகளை நன்கொடையாகக் கொடுத்தும் விட்டார்! பில்கேட்ஸைப் போலவே இன்னொரு பெரும் பணக்கார தொழிலதிபர் வாரன் பஃபெட். இவரது சொத்து மதிப்பு 47 பில்லியன் டாலர்கள். இதில் ஒரே ஒரு சதவிகிதத்தை மட்டுமே தமக்கென்று வைத்துக்கொள்ள போவதாக அறிவித்த பஃபெட், மீதி 99 சதவிகிதமும் தாம் இறப்பதற்கு முன்னால் நன்கொடையாகக் கொடுக்கப்பட்டுவிடும் என்று தெரிவித்திருக்கிறார்.

# ஒரு வீடு... கோயில்... வள்ளல்!

இன்னொரு அமெரிக்கப் பணக்காரர் ஜார்ஜ் லூக்காஸ். இவருக்கும் கருணாநிதி குடும்பத்துக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. இருவரும் சினிமாகாரர்கள். ஸ்டார் வார்ஸ் படங்களை உருவாக்கியவர் லூக்காஸ். இவர் தம் மூன்று பில்லியன் டாலர் சொத்தில் பெரும் பகுதியைக் கல்வித்துறைக்குத் தாம் வாழும்போதே கொடுப்பதாக அறிவித்திருக்கிறார்.

பில்கேட்ஸும் வாரன் பஃபெட்டும் தங்கள் சொத்துகளைத் தானம் செய்வதோடு நிற்கவில்லை. அமெரிக்காவில் இருக்கும் இதர பெரும் பணக்காரர்களை அழைத்து நீங்களும் சம்பாதித்ததை இந்தச் சமூகத்துக்குத் திருப்பிக் கொடுங்கள் என்று பிரசாரம் செய்தார்கள். ''தருவதாக வாக்குறுதி அளித்தல்'' ( கிவிங் ப்ளெட்ஜ்) என்ற இந்த இயக்கத்தில் இணைய, இதுவரை நாற்பது பெரும் பணக்காரர்கள் முன்வந்திருக்கிறார்கள்.



## பக்கங்கள்

பதினெட்டு பில்லியன் டாலர் சொத்துள்ள ஸுகர் பர்க், 11 பில்லியன் சொத்துக்காரர் ரொனால்ட் பெரெல்மன், உலகத்தின் ஆறாவது பெரும் பணக்காரரும் 28 பில்லியன் டாலர் சொத்துக்காரருமான லாரி எல்லிசன் ஆகியோர் முன்வந்துள்ளனர்.

தமது ஆயுட்காலத்திலேயே 95 சதவிகித சொத்தையும் கொடுத்துவிடப் போவதாக எல்லிசன் அறிவித்திருக்கிறார். பில்கேட்ஸின் தொண்டு நிறுவனம் அவர் சொத்துகளை அதிகபட்சம் அவர் இறந்து 50 ஆண்டுகளுக்குள் முழுமையாகக் கொடுத்து முடித்துவிட



வேண்டும் என்று டிரஸ்ட் விதியே போட்டிருக்கிறது.

ஒவ்வொரு வருடமும் வெவ்வேறு அமைப்புகளுக்குக் கொஞ்சம் கொஞ்சம் நன்கொடை கொடுப்பதற்குப் பதில், உடனடியாகப் பெரிய திட்டங்களுக்கு ஆராய்ச்சிகளுக்குப் பெரும் தொகைகளை இப்போதே கொடுத்து விரைவில் நல்ல விளைவுகளும் மாற்றமும் ஏற்படச் செய்ய வேண்டும் என்பது பில்கேட்ஸின் கொள்கை. இப்போதே ஆப்பிரிக்காவில் கொசு எதிர்ப்பு மருந்து பூசிய கொசுவலைகளைப் பெருமளவு விநியோகித்து மலேரியா ஏற்படுவதைக் கட்டுப்படுத்தியிருக்கிறது.

இதேபோல பிரிட்டனிலும் தொழிலதிபர்கள் நன்கொடை வாக்குறுதி இயக்கம் தொடங்கியிருக்கிறார்கள். ஆல்பர்ட் குபே என்பவர் சூப்பர் மார்க்கெட்கள் அதிபர். சொத்து மதிப்பு 480 மில்லியன் பவுண்டுகள். இதில் வெறும் 10 மில்லியன் பவுண்டை மட்டும் தமக்கு வைத்துக் கொண்டு மீதியைத் தரப்போவதாக அறிவித்துவிட்டார். சைன்ஸ்பரி பிரபு என்பவர் ஏற்கெனவே 275 மில்லியன் பவுண்டுகளைத் தானம் வழங்கியிருக்கிறார்.



காங்கிரஸ் கட்சியில் கூட்டணி பற்றி யாரும் பேசக் கூடாது. நான் கூடப் பேசக் கூடாது. சோனியா மட்டும்தான் பேசலாம் என்று காங்கிரசின் உச்சக்கட்ட அடிமைத்தனத்தின் வெளிப்பாடாகப் பேசியிருப்பதற்காக மாநிலத் தலைவர் தங்கபாலுவுக்கு இ.வா.தி.



**இந்த வாரத் திட்டு!**

பொதுவாக இதுவரை பெரும் பணக்காரர்கள் நன்கொடைகள் கொடுத்தாலும் பெருமளவில் தருவதில்லை. அமெரிக்காவில் இதுவரை மொத்த சொத்து மதிப்பில் அதிகபட்சம் 12 சதவிகிதம் வரை மட்டுமே நன்கொடைகளாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதை பில்கேட்ஸும் வாரன் பஃபெட்டும் மாற்றத் தொடங்கியிருக்கிறார்கள்.

சாதாரண மனிதர்களாகத் தொடங்கினோம். இந்தச் சமூகம் இதுவரை நமக்குக் கொடுத்தது. இனி நாம் நம் தேவைக்குப் போக மீதியைத் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்பது இவர்கள் பார்வை.

'பில்கேட்ஸுக்கும் வாரன் பஃபெட்டுக்கும் குழந்தை குட்டி எதுவும் இருக்காது. குடும்பம் இருந்தால்தானே கொள்ளுப் பேரன் சினிமா தயாரிப்பாளராவதற்கும் சேர்த்து இப்போதே சேர்க்கவேண்டியிருக்கும்' என்ற விதண்டாவாதமெல்லாம் செல்லுபடியாகாது.

பில்கேட்ஸுக்கு மூன்று குழந்தைகள். பெரியவளுக்கு வயது 24. அடுத்தவளுக்கு 18 வயது. கடைசி மகன் - வயது 11. முதல் தலைமுறைக்கேகூட சொத்தையெல்லாம் வைத்துவிட்டுப் போக வேண்டும் என்று கேட்ஸ் தம்பதி நினைக்கவில்லை.

வாரன் பஃபெட் முதல் மனைவி இறந்தபிறகு, தம் துணைவியாக இருந்த

வரை அவனுடைய அறுபதாவது வயதில் திருமணம் செய்துகொண்டார். வாரனுக்கு ஒரு மகள், இரு மகன்கள். வாரன் மஞ்சள் துண்டு அணியாத ஒரு பகுத்தறிவுவாதி. கடவுள் நம்பிக்கையற்றவர் என்று அறிவித்துக்கொண்டவர்.

ஈ பே என்ற ஏல இணையதளத்தின் அதிபர்களான பியர், பாம் இருவரும் ஐந்து பில்லியன் டாலர் சொத்து மதிப்புள்ளவர்கள். எங்கள் குடும்பத்துக்கு எவ்வளவு பணம் தேவையோ அதைவிடப் பல மடங்கு அதிகமாக எங்களிடம் இருக்கிறது. அதைச் சும்மா வைத்துக் கொண்டிராமல் இப்போதே பொதுக் காரியத்துக்குப் பயன்படுத்துவதுதான் சரி என்று சொல்லியிருக்கிறார்கள்.

தஞ்சைப் பெரிய கோயிலுக்கு ஆயிரமாவது ஆண்டு விழா எடுப்பதில்கூட வாரிசு அரசியலை முன் நிறுத்தும் மனப்பான்மைதான் துருத்திக்கொண்டு வருகிறது. தஞ்சை மாவட்ட தி.மு.க. கலைஞர் கருணாநிதியை 'எங்கள் ராஜராஜ சோழனே' என்று வர்ணித்து முழுப்பக்க விளம்பரம் வெளியிடுகிறது. இவெண்ட் மேனேஜ்மெண்ட் அமைச்சர் துரைமுருகன், ராஜராஜனுக்கு ஒரு ராஜேந்திர சோழன் போல எங்களுடைய ராஜேந்திர சோழன் ஸ்டாலின் என்கிறார். (அப்படியானால் நான் யார் என்ற தத்துவக் குழப்பம் அழகிரிக்கு ஏற்பட்டிருக்கலாம்.)

தமிழக வரலாறு குழப்பமாக இருக்கிறதாம். அதைச் சரி செய்ய முதல்வர் குழு அமைத்து வரலாறு எழுதவேண்டும் என்கிறார் துரைமுருகன். அப்படி ஒன்று எழுதினால் எப்படியிருக்குமோ? ராஜராஜனை முதலாம் கருணாநிதி என்றுகூட எழுதிவிடுவார்கள்!

பெரிய கோயில் ராஜராஜனின் தனிப்பட்ட சாதனை அல்ல. அந்தக் காலக்கட்டத்தின் தமிழ்ச் சமூகத்தின் ரத்தம், வியர்வை, அறிவு, பக்தி எல்லாம் கலந்த விளைவு.

நீதிமன்ற அவமதிப்புக் குற்றச்சாட்டு வரும் என்பது பற்றி பயப்படாமல் ஊழல் நீதிபதிகள் பட்டியலை உச்சநீதி மன்றத்திடம் அளித்திருக்கும் வழக்கறிஞர்கள் சாந்தி பூஷன், பிரஷாந்த் பூஷன் ஆகியோருக்கு இ.வா.பூ.

**இந்த வாரப் பூச்செண்டு!**

ராஜராஜன் ஜனநாயகவாதியும் அல்ல. வாரிசு அரசியலைப் பின்பற்றியவன். குடும்பத்தில் இருந்து தேர்வு செய்யாமல், மக்களிடையே இருந்து அடுத்த மன்னனைத் தேர்ந்தெடுக்கும் முறையைப் பின்பற்றிய சேர நாட்டுப் பழக்கத்தை ஒழித்துக்கட்டியவன் ராஜராஜசோழன். அதனால் அவனை இன்றைய வாழும் ராஜராஜன்களுக்குப் பிடித்திருப்பதில் ஆச்சரியமில்லை.

தஞ்சைப் பெரிய கோயில் என்ற சரித்திரச் சாதனையைப் போற்றவேண்டுமென்றால், அது கட்சிக்கும் அரசுக்கும் அப்பாற்பட்ட அனைத்துக் கட்சி, அனைத்து மக்கள் இயக்க விழாவாக நடத்தப்பட்டிருக்க வேண்டும். ஆனால் அரசு விழாவாக, ஆளுங்கட்சி விழாவாக நடத்தப்பட்டது. கூட்டணிக் கட்சியாக இருக்கும் வாசனுக்கு இடமுண்டு, திருமாவுக்கு இந்த விழாவில் இடமில்லை என்பது கோயில் சார்ந்த சாதி அரசியலின் இன்னொரு வடிவம்தான்.

ஒரு பெரிய கோயில் கொண்டாடப்படும் அதே வேளையில் தமிழகமெங்கும் எண்ணற்ற வரலாற்றுச் சின்னங்கள் - கோயில்கள், விஹாரங்கள், குகைகள், எல்லாம் கற்குவாரி வியாபாரிகள் கையில் சிக்கிக் கிடப்பதைப் பொருட்படுத்தாமல் அரசு நடக்கிறது.

எல்லாமே இங்கு ஒரு 'ஷோ'தான். தாம் ஒரு ஷோமேன் என்பதில் பெருமைப்படுபவரல்லவா நம் முதல்வர், சாரி ராஜராஜ சோழர்!

கல்லூரி ஆசிரியர்களாகப் பணியாற்ற பல்கலைக்கழக மானியக் குழு (யு.ஜி.சி.) வகுத்துள்ள கல்வித் தகுதிகள் உடையவர்களைத்தான் ஆசிரியர்களாக நியமிக்க வேண்டும் என சென்னைப் பல்கலைக்கழகம் வற்புறுத்தி வருகிறது. 25.09.2010 சனிக்கிழமை நடந்த பல்கலைக்கழக அகாடமிக் கவுன்சில் கூட்டத்திலும் இந்த விஷயம் விவாதிக்கப்பட்டது. அப்போது, ''இது நீதிமன்றத்தின் உத்தரவு'' என்று துணைவேந்தர் திருவாசகம் தெளிவுபடுத்தினார். இந்த விதியை மீறினால் குறிப்பிட்ட பாடப்பிரிவுக்கான அங்கீகாரம் நீக்கப்படும் என்றார்.



அத்துடன், பகல் நேரக் கல்லூரியின் ஆசிரியர்கள் மாலை நேரக் கல்லூரியில் பணியாற்றுவது கூடாது என்றும் கண்டித்துள்ளார்.



❋ சுமித்ரா

# ஆசிரியருக்குத்



❋ சுப்புராம்

அதன்படி, எல்லாக் கல்லூரிகளிலும் தகுதியான ஆசிரியர்களை நியமிக்க முடியுமா? போதிய ஆசிரியர்கள் கிடைப்பார்களா? தமிழகம் எங்கும் உள்ள பல தனியார் சுயநிதிக் கலை அறிவியல் கல்லூரிகளில் குறை தகுதி உடையவர்கள் ஆசிரியர்களாகப் பணியில் அமர்த்தப்பட்டுள்ளனர். இதற்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன.

அரும்பாக்கம் து.கோ.வைணவக் கல்லூரி முதல்வர் நரசிம்மன், ''சம்பளம் போதாத நிலையில், பகல் நேர ஆசிரியர்கள் மாலை நேரக் கல்லூரிகளில் பணியாற்றி இருக்கலாம். ஆனால், இன்று நல்ல யு.ஜி.சி. சம்பளம் கிடைப்பதால் யாரும் அப்படிச் செய்ய வருவதில்லை. மேலும், யு.ஜி.சி. அவ்வப்போது ஆசிரியர் பணிக்கான தகுதிகளை மாற்றி வருவ

**சென்னை பல்கலைக்கழகத் துணை வேந்தர் டாக்டர் திருவாசகம்:**

போதிய தகுதி இல்லாத டாக்டரிடம் சிகிச்சை பெறலாமா? அப்படி ஆசிரியர்களாக நியமிப்பதும் தவறு. இத்தகைய ஆசிரியர்களிடம் படிக்கும் மாணவர்களின் நிலை என்ன? தகுதியில்லாத ஆசிரியர்களை மாணவர்கள் எப்படி மதிப்பார்கள்? குறைந்த சம்பளத்துக்கு ஆசிரியர்கள் வரமாட்டார்கள் என்றால் சம்பளத்தை உயர்த்திக்கொடுக்க வேண்டியதுதானே? சில பாடப் பிரிவுகளுக்கு ஸ்லெட், நெட்



விலான 'நெட்,' மாநில அளவிலான 'ஸ்லெட்' ஆகிய தகுதித் தேர்வுகளை எழுதியவர்கள் கிடைப்பது கஷ்டம்,'' என்கிறார் எஸ்.ஆர்.எம். கலை அறிவியல் கல்லூரி முதல்வர் கே.சுப்புராம். ''அவர்கள், சுயநிதிக் கல்லூரிகளில் பணிபுரிய வரமாட்டார்கள். சுயநிதிக் கல்லூரிகள் பல கிராமங்களில் இயங்குகின்றன. இவ்வாறு தகுதியை வலியுறுத்தினால் யு.ஜி.சி. ஊதியம் தராத சுயநிதிக் கல்லூரிகளுக்குப் போதிய ஆசிரியர்கள் கிடைக்கமாட்டார்கள். பாதிப்பு கிராமப்புற மாணவர்களுக்குதான்'' என்றார் அவர்.



* நரசிம்மன்

''நெட் தேர்வு ஆண்டுக்கு இருமுறை நடந்தாலும், ஸ்லெட் தேர்வு அவ்வாறு நடப்பதில்லை. சுயநிதிக் கல்லூரிகளின் நிலையை உணர்ந்து, எல்லா துணைவேந்தர்களும் யு.ஜி.சி.யை அணுகி, இத்தகுதியைத் தளர்த்தினால் பலன் கிடைக்கலாம்'' என்றார் சுப்புராம். ''கம்ப்யூட்டர் சயன்ஸ் போன்ற சில படிப்புகளுக்குக் குறிப்பிட்ட தகுதியுள்ள ஆசிரியர்கள் கிடைப்பதில்லை. அதற்கு விதியைத் தளர்த்தலாம். அல்லது மாற்று வழியைக் காணலாம்'' என்றார் குரோம்பேட்டை வைஷ்ணவா மகளிர் கல்லூரி முதல்வர் சுமித்ரா. தங்கள் கல்லூரியில் யு.ஜி.சி. வகுத்த தகுதியுள்ளவர்களே ஆசிரியர்களாக நியமிக்கப்படுகிறார்கள் என்றார் அவர்.

# தகுதி வேண்டாமா?

தால் சிக்கல்கள் உருவாகிறது'' என்றார்.

''யு.ஜி.சி. நிபந்தனைகளின்படி பி.எச்டி. முடித்தோர், தேசிய அளவிலான தேர்வு எழுதியவர்கள் கிடைக்காவிட்டால் அதற்கு விதியைத் தளர்த்தலாம். குறிப்பிட்ட காலக்கெடுவுக்குள் தகுதியை அவர்கள் உயர்த்திக்கொள்ள வேண்டும். அதுபோல், யு.ஜி.சி. இதற்கு முன் வகுத்த விதியின் போது நியமிக்கப்பட்டு இப்போது பணியில் இருப்பவர்களுக்குப் பழைய விதியின்படி பணியை வரைமுறை செய்யலாம்,'' என்றவர், ''கிராமப்புறங்களில் நல்ல ஆசிரியர்கள் கிடைக்கமாட்டார்கள் என்பது தவறான கண்ணோட்டம்'' என்றார்.



* திருவாசகம்

- பாகி

# பாட்டியின் பெயரைக் குழந்தைக்குச் சூட்டலாமா?

முருகன், திருநெல்வேலி.

**எங்களுக்கு சில வாரங்களுக்கு முன்பு பெண் குழந்தை பிறந்தது. என் பாட்டியின் பெயர் வெள்ளையம்மா. அந்தப் பெயரை என் மகளுக்கு வைக்க விரும்புகிறேன். என் மனைவி வீட்டார், இதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். மார்டனாக ஒரு பெயர் வைக்க வேண்டும் என அவர்கள் விரும்புகின்றனர். நான் என்ன செய்வது?**

ஸ்வேதா என குழந்தைக்குப் பெயர் சூட்டுங்கள். ஸ்வேதா என்னும் பெயரின் தமிழாக்கம்தான் வெள்ளையம்மா.

**நீண்ட காலமாக முயற்சி செய்து வருகிறோம். திருமணம் தடைபட்டு உள்ளது. பல பரிகாரங்கள் செய்தும் திருமணம் நடக்கவில்லை. இந்தக் குறை நீங்க என்ன வழி? (இதே கேள்வியை இருபதுக்கும் மேற்பட்ட வாசகர்கள் கேட்டுள்ளனர்).**

இயன்ற போதெல்லாம் வெள்ளிக்கிழமைகளில் திருவண்ணாமலையில் கிரிவலம் செய்தால் திருமணத் தடை விலகும். கிரிவலம் செய்யும் நாள் பௌர்ணமி நாளாக இருக்க வேண்டும் என்னும் அவசியம் இல்லை. வெள்ளிக்கிழமை அதிகாலையிலோ அல்லது மாலையிலோ கிரிவலம் செய்து வாருங்கள். முடிந்தால் தொடர்ந்து ஒன்பது வாரம் இந்தப் பரிகாரத்தைச் செய்யவும். தொடர்ச்சியாகச் செய்ய இயலாதவர்கள் விட்டு விட்டுகூட செய்யலாம்.

கண்ணன், மதுரை

**வீட்டுக்குத் தெற்கு வாசல் இருக்கக் கூடாதா?**

இருக்கலாம். இந்தியாவுக்குத் தெற்கும் கிழக்கும்தான் வாசல். வடக்கே இமய மலை, மேற்கே மேற்குத் தொடர்ச்சி மலை. தெற்கு திசைக்கு அதிபதி எமன். வடதிசைக் கடவுள் குபேரன். இந்தக் காரணத்தினால்தான் தெற்குத் தேய்கிறது, வடக்கு வாழ்கிறது என்னும் ஜோதிடப் பழமொழி வழங்கலாயிற்று. வெளியே செல்வதெல்லாம் தெற்குப்புறமாகச் செல்ல வேண்டும். உள்ளே வருவதெல்லாம் வடக்கு முகமாக வர வேண்டும். ஆகவே தெற்கு வாசல் வைப்பதில் தவறில்லை.

சுரேஷ் ராமநாதன், சென்னை.

**குடும்பத் தகராறு காரணமாக ஏராளமான வழக்குகள் நடைபெற்று வருகின்றன. மன நிம்மதியின்றி அவதிப்படுகிறேன். வழக்குகள் தீர வேண்டும். நீதி கிடைக்க வேண்டும். இதற்கு என்ன பரிகாரம் செய்ய வேண்டும்?**

திருவிடைக்கழி, சிறுவாபுரி, திருப்போரூர் ஆகிய தலங்களுக்குச் சென்று முருகனை வழிபடுங்கள். முருகனின் அடி-நடு-முடி என இம்மூன்று தலங்களையும் அருணகிரிநாதர் குறிப்பிடுகிறார். இத்

உங்கள் கேள்விகளை ஜாதகக் குறிப்போடு 'பளிச் பரிகாரம்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க... kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம்.

தலங்களுக்குச் சென்று வழிபட்டால் உங்கள் பிரச்னை யாவும் அடியோடு தீர்ந்துவிடும். ''கொந்துவார் குரவடியினும், அடியவர் சிந்தைவாரிஜ நடுவினும், நெறிபலகொண்ட வேதநன் முடியினும் மருவிய குருநாத'' - திருப்புகழ்.

**கே.டி.பாஸ்கர், சென்னை.**

***என் மகன் ஜாதகத்தில் கடுமையான தோஷம் இருப்பதாக ஒரு பிரபல ஜோதிடர் கூறினார். அதற்காகச் சில பரிகாரங்கள் செய்யும்படி அவர் சொன்னார். அவற்றையெல்லாம் செய்துவிட்டோம். அந்த தோஷங்கள் நீங்கிவிட்டதா, இல்லையா என்பதை நாங்கள் எப்படி அறிந்து கொள்வது?***

நீரிழிவு நோயாளிகள் இரத்தம், யூரின் ஆகியவற்றை அடிக்கடி பரிசோதனை செய்து பார்த்து சர்க்கரை அளவு குறைந்துவிட்டதா என அறிந்துகொள்வது போல் தோஷத்தின் அளவைக் கண்டறிய வழி ஏதுமில்லை. பரிகாரம் என்பது முழுக்க முழுக்க நம்பிக்கையின் அடிப்படையில் செய்யப்படுகின்ற வழிபாடு. நன்மைகள் நடைபெறுவதைக் கண்கூடாகப் பார்க்கும்போது தோஷம் விலகிவிட்டதை உணரலாம். தோஷம் என்பது முற்பிறவியில் செய்த தீவினைப் பயன். அல்லவை தேய அறம் பெருகும் நல்லவை நாடி இனிய சொலின்.





ஹரிகேசநல்லூர் வெங்கட்ராமன்

திரு



ஒரு மத்தியான கொளுத்தும் வெயில் வேளையில், பேய்க் குஞ்சும், கருத்தப்பாண்டியும், பிசின் பழ மரத்தைத் தேடி வந்திருந்தார்கள். இரண்டு பேரும் உள்ளூர் நடுநிலைப் பள்ளியில் எட்டாம் வகுப்பு படித்துக்கொண்டிருப்பவர்கள். பேய்க் குஞ்சுக்குப் படிப்பு என்பது வேப்பங்கொழுந்து. வாத்தியார்கள் வேற்று கிரகவாசிகள். கருத்தப்பாண்டி, அவனுக்கு நேர் எதிர். காலையில், சிறுநீர் இடைவேளையில், பிசின் பழ மரத்தைப் பற்றி கருத்தப்பாண்டிக்கு, பேய்க்குஞ்சு அதன் அருமை பெருமைகளைச் சொல்லியிருந்தான். மத்தியான பள்ளிக்கூடத்தின் இடைவேளையில், பிசின் மரத்தின் பழங்களைப் பொறுக்க முன்னமே இருவரும் தீர்மானித்திருந்தார்கள். இரண்டு பேரும் பள்ளிக்கூடத்தின் மத்தியானச் சாப்பாட்டை முடித்துவிட்டு, புத்தகப் பைகளை வகுப்பறை நண்பர்களிடம் கொடுத்து

# பிசின் பழ மரம்






விட்டு, வெளியே கிளம்பிவிட்டார்கள்.

பேய்க்குஞ்சு குசும்பன். அவன் தலை உச்சியில் மூன்று சுழி போட்டிருந்தன. ஒல்லியான கருத்த தேகம், ஒட்ட வெட்டிய தலை. மூக்கில் ஒரு பக்கம் சளி வழிந்துகொண்டிருக்கும். அவன்



வலது காதில் மஞ்சள் திரவ நிறத்தில் ஊளை அடைப்பும் உண்டு. இடது காலைச் சற்று சவட்டிச் சவட்டி நடப்பான். பேசினால் குற்றால அருவி போல எச்சில் சாரலாய்த் தெறித்து விழும்.

கருத்தப்பாண்டி பரம சாது. குவிந்த தலைமுடியில் எண்ணெய் ஊறிக் கிடக்கும். வாயை மூடிக்கொண்டிருக்கும் சுபாவம். அவன் முன் வரிசைப் பற்களில் காவிக்கறை படிந்திருந்தது. அவன் பெற்றோர்கள் சம்சாரிக் காடுகளில் வேலை செய்கிறவர்கள். அவன் வீட்டில் கத்தரிக்காய் நிறைய புழங்கும். ஒரு பசி நேரத்தில் பச்சைக் கத்தரிக் காய்களை நிறைய தின்றுவிட்டான்.

பிள்ளையார் கோயில் முன்பு, பிசின் பழ மரம்

வாட்டசாட்டமாய் நின்றிருந்தது. பிள்ளையார், யாருமற்று தனித்துக் கிடந்தார். மத்தியான வெயில் வேளையில் பிரபஞ்சமே சுருங்கி மந்தமாகி ஒய்வு எடுக்கிறது. மரத்தின் உச்சிக் கிளையில் இரண்டு மைனாக்கள் சிறகை உதறிச் சிக்கெடுத்துக் கொண்டிருந்தன. இலைகளுக்கு மேலே பழைய பிசின் பழங்களும், கொட்டை தள்ளிய சிதைந்த பழங்களும், உடையாத புதிய பழங்களும் சிதறிக் கிடந்தன. பழங்களைக் கண்டதும் பேய்க்குஞ்சுக்கும் கருத்தப்பாண்டிக்கும் இருப்பு கொள்ளவில்லை. அப்படியே வாரி அள்ளிக் கொண்டு போய் விடலாம் என்கிற ஆசைதான்.

பேய்க்குஞ்சு, குனிந்து ஒரு புதுப் பழத்தை எடுத்துப் பிதுக்கி வாயில் போட்டுக் கொண்டான். எச்சில் பெருக்கெடுத்து ஊறியது. மெல்லிய இனிப்பும், பழத்தின் பசையும் சேர்ந்து வழுக்கிக்கொண்டு தொண்டைக்குள் இறங்கியது. பழக்கொட்டை அவன் உள் நாக்கைத் தொட்டு, நுனி நாக்கில் வந்து நின்றது. அதை வெளியே துப்பினான். அது கருத்தப்பாண்டியின் கால் பாதங்களில் விழுந்து ஒட்டிக்கொண்டது. அவன் காலை உதறியபோது, கொட்டை கீழே விழவில்லை. குனிந்து இடது கையால் எடுத்துப் போட்டான். பேய்க்குஞ்சுவின் ஆள்காட்டிப் பெருவிரல்களுக்கிடையில் பிசின் பழத்தின் பிசுபிசுப்பு ஒட்டியிருந்தது. இரண்டு விரல்களையும் அழுத்தி அழுத்திப் பிரித்துப் பார்த்தான். கைவிரல் பிசுபிசுப்பு நூலாகி உடைந்தது. கருத்தப்பாண்டிக்கு இந்த அனுபவத்தை, பேய்க்குஞ்சு பலமுறை சொல்லியிருக்கிறான். பேய்க்குஞ்சு, சட்டையின் கீழ் வரிசையில் குத்தியிருந்த ஊக்கை அவிழ்த்து, பழங்களை அதில் பொறுக்கிப் போட ஆரம்பித்தான். பழங்களை மிதித்தே பழங்களைப் பொறுக்க ஆரம்பித்தான். இருவரும் கால்களை வரட் வரட்டென்று தரையில் தேய்த்துக்கொண்டார்கள். கருத்தப்பாண்டி, டவுசர் பையின் இரு பக்கமும் பழங்களை நிரப்பிக்கொண்டான். ஒரு காக்கா வேறு கிளையில் அமர்ந்திருந்தது. காக்கா சட்டென்று எச்சத்தை உந்திவிட, கருத்தப்பாண்டி தலையில் எச்சம் விழுந்தது. பேய்க்குஞ்சு வாயைப் பொத்தி விழுந்து விழுந்து சிரித்தான். காக்கா பறந்து போயிற்று. அது பறந்துபோனதைக் கவனிக்காத கருத்தப்பாண்டி, ஒரு கல்லை எடுத்து மேலே விட்டான். கல் பாதி மரம் தாண்டி மேலே போய், அவன் தலைக்கே திரும்பி வந்தது. விலகிக்கொண்டான்.

## காதலுக்காகப் பிறந்தவள்!

பிரபுசாலமனின் அடுத்த படம் மைனா. தேனி மாவட்டம் நாலு மலைகளுக்கு நடுவில் இருக்கும் குரங்கனி கிராமத்தில்தான் 'மைனா'வின் ஷூட்டிங். ஷூட்டிங்குக்காக பஸ் ஒன்றை வாங்கியிருந்தோம். எதிர்பாராதவிதமாக ஒருநாள் பஸ் மலையிலிருந்து உருண்டு விழுந்துவிட்டது. யாருக்கும் எந்தச் சின்ன காயமோ, அசாம்பாவிதமோ இல்லை. ஷூட்டிங்கின்போது தினமும் ஃபைட்டர்ஸ்களுக்காக, கர்த்தரை எண்ணி ஜெபித்துத் தொட்டு அனுப்புவேன். அந்த ஜெபம்தான் அத்தனை பேரையும் காப்பாற்றியது.

- ராகவ்குமார்

பேய்க்குஞ்சுக்குச் சிரிப்பு அடங்கிய பாடில்லை. கருத்தப்பாண்டிக்கு அவன் மீது உள்ளூர கடுப்புதான்; இருந்தாலும் அவன் நண்பன். முறைக்கத்தான் செய்தான். பேய்க்குஞ்சுக்குச் சிரிப்பு அடங்கிவிட்டது. கருத்தப்பாண்டி, இடது கையால் தலையைத் தொட்டுப் பார்த்தான். வெள்ளை நிற திரவ நிலையில் எச்சம் படிந்திருந்தது. தலையிலும் விரலிலும் எச்சத்தின் வெப்பத்தை உணர முடிந்தது. விரல்களை மரத்தில் தேய்த்து எடுத்தான். விரலை டவுசர் பாக்கெட்டில் துடைத்து முகர்ந்து பார்த்தான். எச்சிலைக் கூட்டி வெளியே துப்பினான். காய்ந்த இலை ஒன்றை எடுத்து, தலையில் இருந்த எச்சத்தை வழித்து எறிந்தான். மறுபடியும் தொட்டுப் பார்த்தான்... ஒன்றுமில்லை தான். ஏதோ இருப்பதாகவே அவன் தலை குறுகுறுத்தது. பள்ளிக்கூட நினைப்பு வர இருவரும் பிசின் பழங்களோடு நடக்க ஆரம்பித்தார்கள்.



**ப**ள்ளிக்கூடம் ஆரம்பமாகிவிட்டிருந்தது. பேய்க்குஞ்சும் கருத்தப்பாண்டியும் வகுப்பு வாசலோரம் ஒடுங்கி நின்றார்கள். கணக்கு வாத்தியார் பெருமாள் வகுப்பு இப்போது. சிடுசிடு மூஞ்சிக்காரர். மூக்குப்பொடி போட்டுக்கொள்வார். நடந்துகொண்டே பாடம் எடுக்கும் பழக்கம் அவரிடமிருந்தது. ஒரு மாணவனிடம் வாய்பாடு கேட்டு, அவன் தலை குனிந்து மணப்பெண்ணைப் போல நின்றிருந்தான். ஒரு மாணவியிடம் கேட்டார். அவள் மனனம் செய்து வைத்திருந்ததை அப்படியே கொட்டிவிட்டு அமர்ந்துவிட்டாள். அவர் இவர்கள் வாசலோரம் நின்றிருப்பதைக் கவனிக்கவில்லை. வாத்தியார் மேஜை மீது பிரம்புக் குச்சி ஒன்று நீண்டு கிடந்தது. வகுப்பில் இருந்த யாவரது பார்வையும் பிரம்புக் குச்சி மீதும், வாத்தியார் மீதும் படிந்திருந்தது. நின்றிருந்த மாணவனைச் சுற்றி அமர்ந்திருந்தவர்கள் அவனுக்கு அடி விழப் போகும் பொருட்டு, அதன் அதிர்வைத் தானும் உணரக் கூடுமோ என்று ஒவ்வொருவரும் அஞ்சித் தலை கவிழ்ந்திருந்தார்கள். வாத்தியார் பிரம்புக் குச்சியை ஒரு வாளைப் போல உருவி, அவன் தலை மயிரைக் கொத்தாகப் பிடித்து, அவன் பின்பக்கத்திலும், கை, காலிலும் பலமுறை சவட்டி எடுத்தார். அவர் அடி அவனுக்குப் பலமுறை பழக்கப்பட்டிருந்தது போல. அவர் அடிக்க அடிக்கப் பல அபி

நயங்களைப் பிடித்து ஒரு வகையில் சமாளித்துவிட்டான்.

பேய்க்குஞ்சுக்கும் கருத்தப்பாண்டிக்கும் வயிறு எரிந்துகொண்டிருந்தது. அந்த நிலையிலும் கருத்தப்பாண்டி, அதை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. பேய்க்குஞ்சு, தப்பி ஓடிவிடும் பொருட்டு இருந்தான். ஏதோ ஒன்று அவர்கள் கால்களைக் கட்டிப் போட்டிருந்தது. இருவரும் வெறும் கையோடு காலதாமதமாக வந்திருந்தால், வாத்தியாரிடம் எதையாவது சொல்லிச் சமாளித்துவிடலாம். பேய்க்குஞ்சு சட்டையிலும், கருத்தப்பாண்டி டவுசரிலும் பிசின் மரத்தின் பழங்கள் உப்பியிருந்தன. இருவரும் தலை சொரிந்துகொண்டு நின்றிருந்தார்கள்.

கணக்கு வாத்தியார் கரும்பலகையை நோக்கித் திரும்பியபோது, இருவரும் வகுப்பு வாசலோரம் நடுங்கிக்கொண்டிருப்பதை அவர் கவனிக்க நேர்ந்தது. என்ன நினைத்தாரோ தெரியவில்லை. கரும்பலகை மீது கணக்குப் போட ஆரம்பித்துவிட்டார். இருவருக்கும் மேலும் வயிறு கலங்கியது.

“நீங்க கடம் வாசிக்க கத்துக்கிட்டதும் நல்லதுதாங்க!”

“ஏன்?”

“கோடை வெயிலுக்கு ஜில்லுன்னு தண்ணீர் குடிக்க முடியுதே!”

- பி. பாலாஜிகணேஷ்



பள்ளி மணியிலிருந்து ஒலி சிதறி இடைவெளி விட்டு அடங்கியது.

கணக்கு வாத்தியார் கடிகாரத்தைப் பார்த்தார். வெளி வாசலைப் பார்த்தார். இருவரும் விநோதமான ஒரு புகைப் படத்துக்கு போஸ் கொடுத்து நிற்பதைப் போல நின்றிருந்தார்கள். கை நீட்டி வரச் சொன்னார். இருவரும் தயங்கி உள்ளே நுழைந்தார்கள். வாத்தியார் முன்பு வந்து நின்றார்கள். மூவரையும் சூழ்ந்து கூட்டம் கூடியது. அதட்டி மற்றவர்களை அமரச் சொன்னார். திபுதிபுவென்று மாணவக் கூட்டம் ஒருவகை இரைச்சலோடு அமர்ந்தது. சப்தம் அடங்கியது. பேய்க்குஞ்சு சட்டையை விலக்கிப் பார்த்தார். அவன் கை, பயத்தில் ஈரம் ஊறிப் போயிருந்தது. வாத்தியார் முகம் மலர்ந்தது. கருத்தப்பாண்டிக்கு என்ன நடக்கிறது என்று ஒன்றுமே புரியவில்லை. கிட்டத்தட்ட உயிருள்ள சிலையாகி விட்டிருந்தான். வாத்தியார், ஒரு பிசின் பழத்தை எடுத்துப் பிதுக்கி, வாயில் போட்டுக்கொண்டார். அவர் வாயைத் திறந்தபோது மூக்குப் பொடி நாற்றம் குடலைப் புடுங்கியது. பழத்தை மென்றுகொண்டே கருத்தப்பாண்டியின் உப்பி வீங்கிய டவுசரைத் தொட்டுப் பார்த்தார். அவன் தன்னை ஒரு கைதியைப் போல உணர்ந்தான். மிக இயல்பாக இருவரிடமும் எல்லோருக்கும் பிசின் பழத்தைச் சாப்பிடக் கொடுக்கும்படிச் சொல்லிவிட்டுப் போய்விட்டார். இருவருக்கும் சந்தோஷத்தைப் பார்க்கணுமே! பிசின் பழத்தைவிடத் தித்திப்பு தரும் சந்தோஷம்! பேய்க்குஞ்சு, சட்டையோடு பழங்களைச் சிதறி விட்டு விட்டான். கருத்தப்பாண்டி, கையில் அள்ளிக் கொடுத்தான். யாவரது வாயிலும் பிசின் மரத்தின் பழங்கள் தித்திப்பு தந்து கொண்டிருந்தன.

பள்ளிக்கூடம் விட்ட பிறகு, கணக்கு வாத்தியார், பேய்க்குஞ்சுவையும் கருத்



''என்னது... போலீஸ்காரர்கள் சேர்ந்து ஒரு படம் எடுக்கப் போறாங்களா; பேரு?''
''தொந்திரன்!?''
- சம்பத் குமாரி

தப்பாண்டியையும் தன்னை வந்து பார்க்கச் சொன்னதாக, சக வகுப்பு மாணவன் கணேசன் சொல்லிவிட்டுப் போனான். எதற்குத் தங்களை வரச் சொன்னார் என்று இருவருக்கும் புரியவில்லை. சென்று பார்த்தார்கள். இருவரையும் கணக்கு வாத்தியார், மறுநாள் காலையில் தன்னுடைய வீட்டுக்கு வரச் சொன்னார். இருவரும் எதற்கு என்று கேட்கவில்லை. வருகிறோம் என்று தலையை மட்டும் அசைத்தார்கள்.

பேய்க்குஞ்சுக்கும் கருத்தப்பாண்டிக்கும், சனி, ஞாயிறு இரண்டு நாள் லீவு.

பேய்க்குஞ்சு, கணக்கு வாத்தியாரின் வீட்டுத் தென்னை மரங்களுக்கு, சனிக்கிழமை தண்ணீர் எடுத்து ஊற்றிக் கொண்டிருந்தான்.

கருத்தப்பாண்டி, கணக்கு வாத்தியாரின் வீட்டு ரேஷன் கார்டுக்கு அதே நாளில், கோதுமை, சர்க்கரை (சீனி), ரேஷன் கடையில் வாங்கிக்கொண்டிருந்தான்.

அந்த வருடப் பள்ளிக்கூட இறுதியில், கணக்கு வாத்தியாரின் புண்ணியத்தில், பேய்க்குஞ்சும் கருத்தப்பாண்டியும் எட்டாம் வகுப்பிலிருந்து ஒன்பதாம் வகுப்புக்குத் தேர்ச்சி பெற்றார்கள். நடுநிலைப் பள்ளியிலிருந்து மேல்நிலைப் பள்ளிக்கும் மாறிப் போய்விட்டார்கள்.

ஒன்பதாம் வகுப்பு இறுதித் தேர்வில் கருத்தப்பாண்டி தேர்ச்சியும், பேய்க்குஞ்சு தோல்வியும் அடைந்திருந்தார்கள். பேய்க்குஞ்சுவின் பெற்றோர்கள், அவன் தோல்வி பொருட்டு அவனைச் சவட்டி எடுத்துவிட, பேய்க்குஞ்சு ஒரு மரத்தில் தூக்குப் போட்டுத் தொங்கி இறந்துவிட்டான்.

கருத்தப்பாண்டி, பேய்க்குஞ்சுவின் சடலத்தைப் பார்க்கப் போனபோது, அவன் தொங்கிக்கொண்டிருந்த மரம் வேறு எந்த மரமும் அல்ல; அந்தப் பிசின் பழ மரம்தான்! அதற்குப் பிறகு கருத்தப்பாண்டி, அந்தப் பிசின் பழ மரத்துப் பக்கம் போகவேயில்லை.

கருத்தப்பாண்டியின் தெரு நண்பர்கள் சிலர், ஒரு பொழுதில் பிசின் பழங்களைக் கொண்டு வந்து சாப்பிடும்படி அவனிடம் கொடுத்தார்கள். ஒரு பழத்தைப் பிதுக்கி வாயில் போட்டுக்கொண்டான். தித்திப்பு தருகிற அந்தப் பழம் ஏனோ அவனுக்குக் கசந்து கிடந்தது.




# காமெடி... டிராஜடி...

ஒரு சேனல், வாசகர்களின் எஸ்.எம்.எஸ். மூலம் சிறந்த அரசியல்வாதி, மருத்துவர், வழக்கறிஞர் என்று மூன்று பேரைத் தேர்ந்தெடுக்கிறது. விருது வழங்கும் விழா நேரடி ஒளிபரப்பாக நடந்துகொண்டிருக்கும் போது, பார்வையாளர்கள் சிலர் அந்த நிகழ்ச்சியில் குறுக்கிடுகிறார்கள். விருது பெறும் மூவரும் செய்த குற்றங்களால் தங்களுக்கு நேர்ந்த பாதிப்புகளைக் கூறி அவர்கள் அந்த விருதுகளுக்குத் தகுதியானவர்கள் அல்ல என்றுகூற, ஃப்ளாஷ்பேக் விரிகிறது.

டி.வி. வரதராஜன் தமது நாடகங்களில் புது முயற்சிகளில் ஈடுபடுவது பாராட்டப்பட வேண்டும். அவரது நாடக இயக்கமும் குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

ஏதோ ஒரு நோயாளி என்றில்லாமல் கதாநாயகனின் தம்பியை, போபால் விஷ வாயு விபத்தில் பாதிக்கப்பட்டவராகக் காட்டியிருப்பது ஒரு புதுப் பரிமாணத்தைக் கூட்டுகிறது. அவரை பாசிடிவ் எண்ணங்கள் கொண்டவராக விவரிப்பது இன்னொரு சிறப்பு (திறமையான நடிப்பு- தஸ்தகிர்). குடும்பத் தலைவி, போலீஸ் அதிகாரியென உஷாவும் பரிமளிக்கிறார்.

அசட்டுத்தனங்கள் இல்லாத நடுத்தர குடும்பக் காட்சிகள், இயல்பான நகைச்சுவை (ஸ்க்ரிப்ட், நடிகர்கள் இருதரப்புக்கும் இதற்கான மதிப்பெண்கள் செல்கின்றன) என்று பாசிடிவ் அம்சங்கள் உண்டு. ஆனால் 'இது ஒரு முழு நீள நகைச்சுவை நாடகம்' என்று போஸ்டரில் போட்டிருந்தது காமெடி. (அப்படிப்பட்ட நாடகங்கள் மட்டுமே வசூலில் தேறும் என்னும் நிலை டிராஜடி).

காலாவதியான மருந்துகள், அரசியல்வாதிகளின் ஊர்வலங்களால் ஏற்படும் விபரீதங்கள், டாக்டர்களின் அலட்சியப் போக்கு, சேனல்களின் வணிக நோக்கு... என்று பல சமூக அவலங்கள் சுட்டிக்காட்டப்படுகின்றன.

''பதினைந்து நாள் வெளியூர் போனீங்கனா உங்கள் நோயாளிகளுக்கு அதை எஸ்.எம்.எஸ் மூலமாகத் தெரியப்படுத்தணும்'', ''அரசியல்வாதிகள் வந்தால் அத்தனை போக்குவரத்தையும் நிறுத்தி அடுத்தடுத்த ஜங்ஷனில் இருக்கும் காவலருக்குத் தகவல் கொடுத்து எந்தச் சிக்கலும் இல்லாமல் வி.ஐ.பி. அரசியல்வாதிகளைப் பத்திரமாக அனுப்பி வைக்கிறீர்களே, இந்த வேலையை ஆம்புலன்ஸுக்கும் போக்குவரத்து போலீசார் செய்ய வேண்டும்'' என்பன போன்ற யோசனைகள் வித்தியாசமானவை. கதை-வசனம் சந்திரமோகன் கவனத்தைக் கவர்கிறார்.

**- ஜி.எஸ்.எஸ்.**

கோதானம் செய்வது ஓராயிரம் அஸ்வமேத யாகம் செய்த பலனை கொடுக்கும்

# முன்னோர்கள் நினைவாக மஹாளய அமாவாசை அன்று (7-10-2010) ஸ்வாமி கண்ணன் பட்டாச்சார்யா தலைமையில் கோதானம் செய்து பித்ருக்களின் ஆசிர்வாதத்தை பெற்று அனைத்து தோஷங்களில் இருந்தும் நிவர்த்தி பெற அன்புடன் அழைக்கிறோம்

முன்னோர்கள் நினைவாக மஹாளய அமாவாசை அன்று அனைத்து தோஷங்களில் இருந்தும் விடுபடவும், முன்னோர்களின் ஆசி வேண்டியும் கோதானம், மகிஷ (எருமை) தானம், காறாம் பசு தானம், பசுமடத்தில் நடைபெறுகிறது. யாகங்கள் செய்து, யோகங்கள் சேர்ப்பதில் வல்லவரும் ஹோமங்கள் செய்து க்ஷேமங்கள் குவிப்பதில் வல்லவரும், பித்ரு தோஷ நிவர்த்திக்கு விருட்ச பரிகாரம் சொல்பவருமான ஜோதிட சிம்மம் ஸ்ரீயோக ஆஞ்சநேய சக்தி பீடாதிபதி விருட்ச சாஸ்திர வித்வான் பூஜ்ய ஸ்ரீ ஸ்வாமி கண்ணன் பட்டாச்சார்யா தமது வேத வித்வான்களின் குழுவுடன் கோதான பூஜை, கோபூஜை செய்ய உள்ளார். இதில் அனைவரும் கலந்து கொண்டு கோதானம் செய்து பித்ருக்களின் ஆசியை பெற்று தோஷ நிவர்த்தி பெற அன்புடன் அழைக்கிறோம்.

**கோதானத்திற்கு மிஞ்சி ஒரு புண்ணியமும் இல்லை. பரிகாரத்துக்கு அதுவே பெரிய மருந்து**

கோதானம் (பசுவும் கன்றும்) செய்தால் ஜாதக ரீதியான தோஷம், பித்ரு தோஷம், திருஷ்டி தோஷம் விலகி, புத்ர பாக்கியம், தடைபட்ட திருமணம் கைகூடும். குடும்பத்தில் மங்கல நிகழ்ச்சிகள் நடைபெறும். கோதானம் செய்ய ரூ.9,000/-

காறாம் பசு (பசுவும் கன்றும்) தானம் செய்தால் 7 1/2 ஆண்டு, அஷ்டமச் சனி விலகும். நவக்கிரஹ தோஷம், நாக தோஷம், ஆபிசார தோஷம், வாஸ்து தோஷம், எதிரிகள் தொல்லை விலகி, சந்தான அபிவிருத்தி உண்டாகும். காறாம் பசு தானம் செய்ய ரூ.10,000/-

மகிஷ தானம் (எருமையும் கன்றும்) செய்தால் நோய் பாதிப்பால் பயம், வாகன விபத்து, தீய சக்தியால் ஏற்படும் பயம், வியாபாரம். உத்யோகத் தடை நீங்கும். பாப தோஷம் விலகி ஆயுள் விருத்தி, மனச்சாந்தி உண்டாகும். மகிஷ தானம் செய்ய ரூ.11,000/-

மேற்கண்ட தானம் செய்ய (Cheque/DD/MO மூலமாக) **Sri Ghosala Seva Trust, Chennai** என்ற பெயரில் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி மஹாளயபக்ஷ அமாவாசை அன்று நடைபெறும் கோதானத்தில் கலந்து கொண்டு நடமாடும் தெய்வமாகிய கோமாதாவின் பேரருளை பெற அன்புடன் அழைக்கிறோம்.

**மேற்கண்ட தானம் செய்பவர்களுக்கு பித்தளையிலான பெரிய கோமாதா விக்ரஹமும் வெள்ளியிலான ஐஸ்வர்ய பெருமாள் விளக்கும் அனுப்பி வைக்கப்படும்**



நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு

# பசுமடம்

(Recognised by Animal Welfare Board of India)

வயதான பசுக்களை பராமரிக்கும் இல்லம்
ஆதரவற்ற பசுக்களை பாதுகாக்கும் இல்லம்
ஊனமுற்ற, நோயுற்ற பசுக்களை பேணும் இல்லம்

பெருமாளகரம், திருவேற்காடு (P.O), சென்னை-77 போன்: 044 -3299 9888



ஈரம் சொட்டச் சொட்ட
குளியல் அறையிலிருந்து
நீ வெளியே வந்து
என்னை ஆண் ஆக்கியபொழுதில்
புரிந்தது உன்னால்
தாடியுடன் வீணாகிப்போன
பையன்களின் காதல் ரசனை...

- கவின்

''என்னோட எதிரி பணக்காரன் இல்ல ஆனந்த். பணக்காரன்ங்கற அகங் காரம்.'' கதிர், தாம் சொல்வதின் முழு பரிமாணத்தையும் தெரிந்து உணர்ந்தவன் போல் பேசினான். ''நான் சதீஷுக்கு கேன் வாஸ் பண்ணிட்டு, இப்ப உதயகுமாருக்கு ஹெல்ப் பண்றது எந்தவிதத்தில் நியாயம்னு நீங்க நினைக்கலாம். ஏன்? நான் சதீஷுக்குத் துரோகம் பண்றேன்னு, உதய் நீ கூட என் மேல சந்தேகப்படலாம். மேலோட்டமா பாத்தா அப்படித்தான் தெரியும். உண் மையைச் சொல்லப்போனா, நான் சதீஷுக்கு உதவி பண்றதுக்காகத்தான் இந் தக் காரியத்தையே செஞ்சேன்.'' உதய குமார், புருஷோத், ஆனந்த் மூவருக்குமே ஆச்சரியம்.

''எப்படி?''

''சதீஷ், எலக்ஷன்ல ஜெயிக்கணும்ங்கற வெறியில, செய்யக் கூடாத, செய்ய முடி யாத ஒரு காரியத்தைச் செய்யப் பாக் கிறான். அந்த இரகசிய சதியை உங்களுக் குத் தெரியப்படுத்திட்டா, சதீஷ் அந்தக் காரியத்தைச் செய்ய விடாம, நீங்க தடுத் திடுவீங்க. தப்பு பண்ணி தண்



வே. எழிலரசு



டணையில மாட்டிக்காம சதீஷ் காப்பாத்தப் படணும். அதுக்காகத்தான்.''

ஆனந்த் கதிரை ஊடுருவிப் பார்த்தான். ''சில பேரு சிந்திச்சு ஒரு செயலைச் செய்வாங்க. ஆனா சில பேரு அவசரப்பட்டு எமோஷனலா ஏதாவது செஞ்சுட்டு, அதை நியாயப்படுத்த சிந்திப்பாங்க. உன் விஷயத்துல ரெண்டாவது சொன்னதுதான் நடந்து இருக்கு.''

உதயகுமாருக்கு ஆனந்தின் உரையாடலில் தெறித்த கூர்மை, பெருமையை ஏற்படுத்தியது.

கதிர், தமது மன இடுக்குகளில் நெளியும் இருளின் மீது ஆனந்த் பீய்ச்சிய ஒளிக்கற்றையால் கொஞ்சம் தடுமாறித்தான் போனான். முறைத்துப் பார்த்தான். ஆனந்தும் ஒருவிதத்தில் தம்மைப் போலதான் என்ற நிஜத்தை அறிந்து வைத்திருந்ததனால் சினப்பூ மலர்ந்தபோதே உதிர்ந்தது.

''நம்மை மாதிரி இருக்கிறவங்களுக்குச் சொற்கள்தான் பாதை இல்லையா ஆனந்த்?''

''பாதை மட்டுமல்ல. படிகளும்தான். சொற்களைப் பற்றிக்கொண்டு நகர்ந்தே நாம் உண்மைகளைக் கண்டடைந்து விட முடியும்.''

அப்போது சமூசாவோடும், சொம்பு நிறைய தேனீரோடும் கதிரின் அம்மா வந்தார்.

தேனீர் பருகும்போது, ''கொஞ்சம் இருங்களம்ப்பா. அடுப்புல உலை வெச்சுட்டேன். சாப்பிட்டுப் போய்டலாம். மீன் குழம்பு சாப்பிடுவீங்கதானே?''

# காதல் 3 கேம்பஸ்



''இருக்கட்டும்மா. இன்னொரு நாளைக்கு வர்றோம்'' என்று உதயகுமார் எழுந்திருக்க... ஆனந்த், கதிரிடம்,

''அம்மாக்கள் எல்லா வீடுகளிலும் அம்மாக்கள்தான்'' என்றான்.

''பின்ன, கடவுளுக்கு ஒய்வும், களியாட்டங்களும் வேண்டாமா?'' என்றான் கதிர்.

''கொஞ்சம் இரு ஆனந்த்,'' என்று சொல்லி, அறையின் மூலையில் இருந்த டிரங்க் பெட்டியைத் திறந்து, ஒரு புத்தகத்தை எடுத்து வந்து, ''நடைபாதையில

வாங்கினேன். நான் படிச்சுட்டேன். என் வீட்டுக்கு வந்துபோன ஞாபகத்துக்கு'' - என்று சொல்லி ஆனந்துக்குக் கொடுத்தான். ஆனந்த் புத்தகத்தைப் பார்த்தான். மகா சுவேதா தேவி எழுதிய 'காட்டில் மனிதர்கள்.'

அவர்களைத் தெருவாசல்வரை வந்து வழியனுப்ப, கூடவே வந்த கதிர், உதயகுமாரிடம் ''ரொம்ப நாளைக்கு அப்புறம் எங்க வீட்டுக்குள்ளாற நம்ம காலேஜ் பிரண்ட்ஸ் வந்ததுல அம்மாவுக்கு ரொம்ப சந்தோசம்...''

''ஏன் சதீஷ் வர மாட்டான்?''

''ஊஹூம். அவனுக்கெல்லாம் எங்க தெரு ஜி.பி.ஆர்.எஸ்.-லயே இருக்காது.''

உதயகுமார் ரசித்துச் சிரித்தான்... விட்டு, ''வேற யாரும் வர மாட்டாங்களா?''

''முன்னல்லாம் நவீன் வருவான். இப்ப தெருவிலேயே நின்னுட்டுப் போயிடறான்.''

''ஏன்?''

கதிர், சிரித்துக்கொண்டே சொன்னான், ''என் தங்கச்சிக்குக் கல்யாணம் ஆயிடுச்சே.''

நண்பர்கள் சிரித்துக்கொண்டே பைக்கை ஸ்டார்ட் செய்தார்கள்.

மகளிர் விடுதியின் இரண்டாவது தளத்தில் நாற்பத்தியோறாம் எண் அறையின் குளியலறையிலிருந்து உடலில் சுற்றிய டவலோடு வெளியே வந்த அகிலா, ''நிஷா நீ உன் ரூமுக்குப் போகலை?'' எனக் கேட்டாள்.

''இல்லை.''

''ஏன்?''

''நீ குளிச்சுட்டு வர்ற அழகைப் பாக்கணும்தான்.''

கண்ணாடி முன்னால் நின்று தம்மைப் பார்த்து ரசித்துக்கொண்ட அகிலா பெட்டியைத் திறந்து, நைட்டியை எடுத்துக்கொண்டு மீண்டும் குளியலறைக்குள் நுழைய,

''ஏண்டி?'' என்று நிஷா அதட்டலாகக் கேட்டாள்.

அகிலா, நின்று நிதானமாக, ''என்ன?'' என்று வினவ, ''இங்கேயே நைட்டி மாத்த வேண்டியது தானே, ஏன் இப்ப பாத்ரூம் உள்ள போற?''

அகிலா, குறும்பாகச் சிரித்துக்கொண்டே, ''நான் மாட்டம்ப்பா. எனக்குப் பயமா இருக்கு'' என்று சொல்லிக் கொண்டே குளியலறையில் நுழைந்து கதவைத் தாழ்ப் போட்டாள்.

வசுமதி மீண்டும் சிரிக்க, கட்டிலின் மீது இருந்த தலையணையை எடுத்து அவள் மீது வீசினாள் நிஷா. ''ஊமைகோட்டான்... ஊமைகோட்டான். எல்லாத்துக்கும் டபுள் மீனிங்க்ல

'இத்தனை நாளாய் எங்கிருந்தாய்', சின்னத்திரை தொகுப்பாளர் ஆனந்தக் கண்ணன் கதாநாயகனாக அறிமுகமாகும் படம். 'காலமெல்லாம் காதல் வாழ்க', 'உன்னுடன்', உள்ளிட்ட படங்களை இயக்கிய ஆர்.பாலு இப்படத்தை இயக்குகிறார்.

''வழக்கம் போல் என் படங்களில் இருக்கும் காதல்தான் களம். நீண்ட இடைவெளிக்குப் பின் இயக்குவதால் அதிக சிரத்தை எடுத்திருக்கிறேன். திருமணம் நின்று போன நிலையில் காதல் வயப்படும் ஜோடிகளைப் பற்றிச் சொல்லியிருக்கிறேன். காஞ்சிபுரத்தில் வாழும் நெசவாளர்களின் வாழ்வியல் சார்ந்த பிரச்னைகளுடன் கூடிய, காதல் கதையாக இது உருவாகியிருக்கிறது. தீனா இசையமைக்கிறார். 'காலமெல்லாம் காதல் வாழ்க', என் முந்தையப் படங்களைப் போல இதிலும் பாடல்கள் சிறப்பாக வந்துள்ளன. என்கிறார் இயக்குநர் பாலு.

சிரிக்கறதைப் பாரு.''

மற்றொரு தலையணையை எடுக்க, கதவு திறக்கும் சப்தம் கேட்டுத் திரும்ப, நைட்டியில் அறைக்குள் வந்த அகிலாவைப் பார்த்து நிஷா விசிலடித்தாள்.

''ஏய் அகில், நீ சுடிதார் போட்டாலும் சரி. ஜீன்ஸ் போட்டாலும் சரி. மிடி போட்டாலும் சரி, புடைவை கட்டினாலும் சரி...''

''சரி...சரி என்ன?''

''எல்லாத்துலயும் உன்னைப் பாத்தா எனக்கே கிக்கா இருக்குதே. அந்தக் கல்லுளி மங்கன், ஏன்டி அவனுக்கு ரசனையே கிடையாதா?''

''ஏய் நிஷா நீ ஓவரா பேசுறடி...''

''கோபம் வந்துடுச்சா... வரட்டும். இன்னிக்கு ரெண்டுல ஒண்ணு கேக்காம போறதுஇல்ல.''

''என்ன... என்ன கேக்கணும் உனக்கு''

''நீ உதயகுமாரை லவ் பண்ற?''

''ஆமாம்.''

''அப்ப வாயைத் தொறந்து 'உதய் ஐ லவ் யூ'ன்னு சொல்ல வேண்டியது தானே?''

''ஒரு பொண்ணு எப்படிடி முதல்ல சொல்றது?''

''ஏன்? சொன்னா என்ன தப்பு? மேடையேறி கவிதை வாசிக்கிற. பாலிடிக்ஸ் பேசற. சேர்மன் எலக்ஷன்ல உங்க ஆளு ஜெயிக்கணும்னு பாலிடிக்ஸ் பண்ற. உமன்ஸ்லிப் பத்தி மேகஸின்ல எழுதற, லவ் சொல்றதுக்கு மட்டும் முடியலியோ?''

நிஷா, தம்மைச் சமன்படுத்திக் கொள்ள பெருமூச்சு விட்டாள்.

பின்பு, ''நீ இப்படியே இருந்தியேன்னா, டேஞ்சராயிடும். வேறு எவளாவது முந்திப்பா?''

''சே! சே! அப்படியெல்லாம் நடக்காது. எனக்கு உதயைப்பத்தி நல்லா தெரியும்.''

''என்னடி தெரியும்? நாங்க எல்லோரும் இருக்கும்போது, உதய் பக்கத்துல நின்னு, இல்ல, உக்காந்து பேசியிருக்க. அதுகூட அந்தரங்க விஷயம் எதுவும் இல்லை. பொது சர்ச்சை. அப்படி இப்படி ஓரக்கண்ணால பாத்திருக்க. அவ்வளவுதானே உன் பௌண்டரி? நெருக்கமா... உரசுறது மாதிரி நின்னு... ஐ மின் பவர் ஜெனரேட் ஆகுறது மாதிரி நின்னு, எல்லாத்தையும் மறந்து நீங்க ரெண்டு பேரும் பேசி இருக்கீங்களா?''

''அகிலா என்னடி இவ இப்படிப் பேசறா... அவ ரூமுக்கு அடிச்சுத் துரத்துடி''

''ஏய் ஊமைக்கோட்டான். நீ குறுக்கப் பூராதே. நீ சொல்லு அகிலா... உதய் என்ன புக்ஸ் படிப்பான் தெரியுமா உனக்கு? என்ன மியூசிக் கேட்பான் தெரியுமா உனக்கு?''

''உதயோட மெனுவில அவனோட பேவரிட் ஐட்டம்ஸ் என்னென்னன்னு தெரியுமா... சாமி கும்பிடுவானா? அவனுக்கு ஃபெய்த் இருக்கா? ஒன்னும் தெரியாது. ஆனா... காதல். அப்படித்தானே?''

நிஷாவின் அடுக்கடுக்கான கேள்விகளினால் எரிச்சலோ, கோபமோ கொள்ளாமல், அதே சிநேக முகபாவத்தோடு கட்டிலில் வந்து அமர்ந்த அகிலா, ''நிஷா நாம ரெண்டு பேரும்

க்ளோஸ் ப்ரண்ட்ஸா இருக்கோமே, என்ன பத்தி உனக்கு என்ன தெரியும்?''

''எல்லாம் தெரியும்.'' நிஷா சலிப்போடு உதட்டைச் சுழித்தாள்.

''என்ன தெரியும்? நம்ம காலேஜ்ல எவன் எவன் எனக்கு லவ் லெட்டர் எழுதியிருக்கான் தெரியுமா?''

அகிலா, இப்படிக் கேட்டதும், நிஷாவின் அத்தனை ஆத்திரமும் சட்டென்று வடிய, சடாரென நிறம் மாறிவிட்டாள்.

''ஏய்... ஏய்... யார் யாருடி சொல்லுடி...''

''யார் யார் எழுதலைன்னு சொன்னா... சீக்கிரமா சொல்லி முடிச்சுடலாம்.''

''அவ்ளோ பெரிய லிஸ்டாடி?''

இவ்வளவு நேரம், இருவரின் உரையாடலையும் சுவாரஸ்யமாகக் கவனித்துக் கொண்டிருந்த வசுமதி, இப்போது குறுக்கிட்டாள்.

''ஏய் அதெல்லாம் சீரியஸா எடுத்துக் காதீங்கடி. இப்பல்லாம் பையன்கள் லவ் லெட்டர்ஸ் எழுதறதே இல்ல. பிரிண்ட் பண்ணிடறானுங்க. அப்படியே பிட் நோட்டீஸ் டிஸ்டிரிபியூட் பண்ற மாதிரி பாக்கற பொண்ணுக்கெல்லாம் கொடுக்கறானுங்க.''

அகிலா, நிஷாவையும் வசுமதியையும் அழுத்தமாகப் பார்த்தாள். ''இல்லை. எனக்கு வந்ததெல்லாம் சுண்டல் காகிதமில்லை. மெனக்கெட்டு எழுதினதுதான். நான் போன வருஷம் படிச்ச காலேஜிலிருந்து ஏன் டி.சி. வாங்கிட்டு வந்தேன் தெரியுமா?''

''ஏன்?''

''அங்கேயும் லவ் லெட்டர் பிரச்னைதான்''

''இவ்ளோ டிமாண்ட் இருக்கும்போது, ஏன்டி இந்த உதய்குமார்ங்கற மௌன சாமியார் பின்னால அலையற...''

''ஆம்பளைன்னா கள்ளமில்லாத பார்வையோட இருக்கிற கம்பீரம் இருக்கணும்டி. அந்தக் கம்பீரம் உதய்கிட்ட இருக்குது.''

வசுமதி மீண்டும் குறுக்கிட்டாள். ''நிறுத்து... நிறுத்து. நீ இது மாதிரி ராகம் போட்டுப் பேசினாலே டைரியை எடுத்து வெச்சுக்கிட்டு, கவிதை எழுத ஆரம்பிச்சுடுவே.'' மேஜையின் மீது இருந்த டைரியை எடுத்து, அவள் முகத்துக்கு நேராக ஆட்டினாள். டைரியை வாங்க அகிலா முற்பட, ''முதல்லே உதய் சொன்ன பிராஜக்ட்டை முடிக்கணும். அப்புறம்தான் கவிதை.''

''எல்லாம் முடிச்சாச்சு.''

''என்னது முடிச்சாச்சா'' வசுமதி, நிஷா இருவருமே கோரஸாகக் கேட்டார்கள்.

''ஆமாம் ஒரு மாஸ்டர் பிளான் போட்டு, அதைச் செயல்படுத்தியும் ஆச்சு. நாளைக்குக் காலையில பாரு, நம்ம ஹாஸ்டல் வாசலை ஆல் ஓவர் இண்டியாவே பாக்கப் போவுது.'' அகிலா விவரிக்க, நிஷாவும், வசுமதியும், ஆச்சரியத்தால் கைகளை விரித்து அகிலாவை அணைத்து, ஆளுக்கொரு கன்னத்தில் முத்தமிட்டார்கள்.

(தொடரும்)

''தலைவர் மக்களுக்காக எழுதி வச்ச வீட்டைப் பத்தி செய்தி வந்ததும் ஏன் அவரை எல்லோரும் திட்றாங்க?''

''எழுதி, வச்சது அவரோட வீட்டே இல்லையாம்...!''

- தஞ்சை சுபா



ஒருவன் நம்பத்தகாத நிகழ்ச்சி எதையேனும் கூறினால், "என்னப்பா கதை சொல்லுகிறாயே?" என்கிறோம். அதே சமயத்தில், கதைகளைப் பற்றி விமர்சனம் எழுதும் பொல்லாத மனிதர்கள் இருக்கிறார்களே, அவர்கள் கதையில் வரும் ஒவ்வொரு சம்பவமும் வாழ்க்கையில் நடைபெறக் கூடியதாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள்.

விமர்சகர்கள் இப்படிச் சொல்கிறார்களே என்பதற்காகக் கதை ஆசிரியர் வாழ்க்கையில் நடைபெறும் சாதாரண நிகழ்ச்சிகளையே அப்பட்டமாக எழுதிக்கொண்டு போனால், படிக்கும் ரசிகர்கள் "நடை நன்றாய்த்தான் இருக்கிறது. ஆனால் கதை ஒன்றுமேயில்லையே?" என்று ஏமாற்றமடைகிறார்கள்.

வாழ்க்கையில் உண்மையாக நிகழும் பல சம்பவங்கள் கதை ஆசிரியர்கள் புனையும் அபூர்வக் கற்பனைகளைக் காட்டிலும் மிக அதிசயமானவை. ஒரு சாதாரண உதாரணத்தைச் சொல்லுகிறேன்:

"இராமச்சந்திரன் தம் தோழன் முத்துசாமியைத் தேடிக்கொண்டு மயிலாப்பூருக்குப் புறப்பட்டான். முத்துசாமி மயிலாப்பூரில் ஏதோ ஒரு சந்தில் வாடகை வீட்டில் இருக்கிறான் என்று மட்டும் அவனுக்குத் தெரியுமே தவிர, சரியான விலாசம் தெரியாது. அன்றைக்கு மயிலாப்பூரில் அறுபத்து மூவர் உற்சவம் என்பதும் இராமச்சந்திரனுக்குத் தெரியாது. மயிலாப்பூரில் நாலு மாடவீதிகளிலும் ஒரு லட்சம் ஜனங்கள் அன்று கூடி இருந்தார்கள்.

"இராமச்சந்திரன், "இன்றைக்குப் பார்த்து வந்தோமே? என்ன அறிவீனம்! முத்து சாமியையாவது இந்தக் கூட்டத்தில் இன்று கண்டுபிடிக்கவாவது?" என்று எண்ணிக்கொண்டு வந்த வழியே திரும்பிப் போகத் தீர்மானித்தான். கூட்டத்தில் புகுந்து முண்டியடித்து அவன் போய்க் கொண்டிருந்தபோது, யாரோ ஒருவன் பேரில் தடால் என்று முட்டிக்கொண்டான். 'அட இராமச்சந்திரா!' என்ற குரலைக் கேட்டு நிமிர்ந்து பார்த்தால் அங்கே சாக்ஷாத் முத்துசாமி நின்றுகொண்டு பல்லை இளித்தான்!"

இவ்வாறு ஒரு கதையில் எழுதினால் விமர்சகர்கள் பிய்த்து வாங்கிவிடுவார்கள். "ஒரு லட்சம் ஜனங்கள் இருந்த கூட்டத்தில் இராமச்சந்திரன், முத்துசாமியின் மேலேதானா முட்டிக்கொள்ள வேண்டும்? அது எப்படிச் சாத்தியம்? நம்பக் கூடியதாயில்லை" என்று ஒரேயடியாய்ச் சாதிப்பார்கள். ஆனால், மேற்கூறியது என் சொந்த அனுபவத்திலேயே நடந்திருக்கிறது. அதைக் காட்டிலும் பன்மடங்கு வியப்பளிக்கக்கூடிய அபூர்வ சம்பவங்களும் நிகழ்ந்திருக்கின்றன. நீங்கள் ஞாபகப்படுத்திக் கொண்டு பார்த்தால் உங்கள் ஒவ்வொருவருடைய அனுபவத்திலும் இம்மாதிரி எத்தனையோ நிகழ்ந்திருக்கும்.

– 'படித்தேன் ரசித்தேன்' புத்தகத்திலிருந்து



ஒரேமாதிரி இல்லாமல் மற்றவர்களிடமிருந்து வித்தியாசப்படும்போதுதான் கவனிக்கப்படுகிறோம். இது மனிதனின் பழக்கவழக்கம் முதல் படிப்புவரை பொருந்தும். அப்படிப்பட்ட சில படிப்புகளும், அதைப் படித்தோரின் தேவையும் நாளுக்கு நாள் அதிகரித்து வருவதே நிதர்சனம். அப்படி என்னென்ன படிப்புகள் இருக்கின்றன.




### டிஸைனிங் படிப்பு:

விளம்பரத் துறை, ஃபர்னிச்சர் நிறுவனங்கள், வர்த்தக மேம்பாட்டு நிறுவனங்கள், கிளாஸ்வேர் நிறுவனங்கள், தொலைக்காட்சி, திரைப்படத் துறை... போன்றவற்றில் பணிபுரிய விரும்புபவர்களுக்கு ஏற்றது டிஸைனிங் படிப்பு. இதற்கு ஓவியம் வரையும் திறமையும், படைப்பாற்றலும் இருப்பது அவசியம். இந்தப் படிப்பில் இளநிலை, முதுநிலை டிப்ளமோக்கள் உள்ளன.

நமது நாட்டில் டிஸைனிங் படிப்பில் அங்கீகரிக்கப்பட்ட கல்வி நிலையம் அகமதாபாத் நேஷனல் இன்ஸ்டிட்யூட் ஆஃப் டிஸைனிங்தான். மத்திய அரசின் தொழில் வணிகத் துறையின் உதவியுடன் செயல்படும் இது தன்னாட்சிப் பெற்றது. இங்கே கிராஜுவேட் டிப்ளமோ படிக்கலாம். இது நான்கு ஆண்டு படிப்பு. பர்னிச்சர் மற்றும் இன்டீரியர் டிஸைன், புராடக்ட் டிஸைன், செராமிக், கிளாஸ் டிஸைன், கிராபிக்ஸ் டிஸைன், அனிமேஷன் ஃபிலிம் டிஸைன், டெக்ஸ்டைல் டிஸைன்... எனப் பல விருப்பப் பாடங்களும் உள்ளன. இந்தப் படிப்பில் சேர ப்ளஸ் டூ தேர்ச்சி போதுமானது. வயது இருபதுக்குள் இருக்க வேண்டும். இங்கே போஸ்ட் கிராஜுவேட் டிப்ளமோ படிக்கவும் வசதி உள்ளது. இது இரண்டரை ஆண்டு படிப்பாக இருக்கும். இந்தப் படிப்பில் சேர அங்கீகரிக்கப்பட்ட பல்கலைக் கழகத்தில் இளநிலைப் பட்டம் பெற்றிருக்க வேண்டும். விவரங்களுக்கு: http://www.nid.edu

### செராமிக் டெக்னாலஜி

நமது உடலில் இருக்கும் எலும்பு, பற்கள் போன்றவை நோயினால் பாதிக்கப்பட்டால் அதனை மாற்றி செயற்கை எலும்புகளையும் பற்களையும் பயன்படுத்துகிறார்கள். அதில் செராமிக்கின் பங்கு மிக முக்கியம். செராமிக் என்பது களி மண், ஸிர்கோனியா போன்ற மூலப் பொருட்களின் கலவை. நம் டூ வீலரின் ஸ்பார்க் ப்ளக், செராமிக் டெக்னாலஜியின் வடிவமைப்புதான். எலக்ட்ரானிக்ஸ் துறை ஆரம்பித்து பீங்கான் வடிவமைப்பு, மருத்துவத்துறை வரை செராமிக் தேவை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது.

கண்ணாடித் தொழிற்சாலைகள், எஃகுத் தொழிற்சாலைகள், அணுசக்தி அமைப்புகள், சிமெண்ட், மருந்துப் பொருட்கள் ஆகிய உற்பத்தி நிறுவனங்களில் உடனடி வேலைவாய்ப்போடு கைநிறைய சம்பளமும் காத்திருக்கிறது.

தமிழ்நாட்டில் செராமிக் டெக்னாலஜி படிப்பு பல்வேறு பொறியியல் கல்லூரிகளில் கற்றுக்கொடுக்கப்படுகிறது. இந்தப் படிப்பில் சேர விரும்பும் மாணவர்கள் பிளஸ் டூ வில் கணிதம், இயற்பியல், வேதியியல் பாடப் பிரிவுகளில் தேர்ச்சி பெற்றிருப்பது அவசியம். நிகர்நிலைப் பல்கலைக்கழகங்களிலும் இந்தப் படிப்பு கற்றுக்கொடுக்கப்படுகிறது. தமிழ்நாட்டில் செராமிக் இன்ஜினீயரிங் பாடப் பிரிவில் முதுநிலைப் பட்டம் பெறுவதற்கு சென்னை அண்ணா பல்கலைக்கழகம் நடத்தும் டான்செட் நுழைவுத் தேர்வு அல்லது அகில இந்திய அளவில் நடத்தப்படும் கேட் எக்ஸாம் ஆகிய இரண்டில் ஏதாவது ஒன்றில் தேர்வாகி இருப்பது அவசியம்.

## கெமிக்கல் இன்ஜினீயரிங்

**நா**ம் பயன்படுத்தும் பேஸ்ட், சோப்பு, ஷாம்பு, லோஷன், சீப்பு, குளிர்பானங்கள், செல்ஃபோன் ஆகியவையிலிருந்து ஆரம்பித்து கடல்நீரை குடிநீராக்கும் திட்டம் வரை எல்லாவற்றுக்கும் அடிப்படை கெமிக்கல் இன்ஜினீயரிங். மேற்சொன்ன அனைத்தின் தேவைகளும் நாளுக்கு நாள் அதிகரிக்குமே தவிர குறையப் போவதில்லை. அப்படியானால், இந்தப் படிப்பின் தேவையும் வருங்காலத்தில் கண்டிப்பாக அதிகரிக்கவே செய்யும். அதனால், இப்படிப்பைத் தேர்ந்தெடுத்துப் படிக்கும் மாணவர்களுக்குப் படித்து முடித்தவுடன் கைநிறைய சம்பளத்துடன் உடனடி வேலைவாய்ப்பும் காத்திருக்கிறது.

டிப்ளமோ படிப்புகளிலும், பொறியியல் படிப்புகளிலும் கெமிக்கல் இன்ஜினீயரிங் கற்றுத்தரப்படுகிறது.



டிப்ளமோ இன் கெமிக்கல் இன்ஜினீயரிங் படிப்பதற்குப் பத்தாம் வகுப்பு தேர்ச்சி போதுமானது. ப்ளஸ் டூ படித்த மாணவர்கள் நேரடியாக இரண்டாம் ஆண்டு டிப்ளமோ இன் கெமிக்கல் இன்ஜினீயரிங் வகுப்பில் சேரலாம். தமிழ்நாட்டில் பத்துக்கும் மேற்பட்ட பொறியியல் கல்லூரிகளில் கெமிக்கல் இன்ஜினீயரிங் தொடர்பான பட்டப் படிப்பு இருக்கிறது. இந்தப் பாடப் பிரிவில் முதுநிலைப் பட்டம் பெறுவதற்கு, சென்னை அண்ணா பல்கலைக்கழகம் நடத்தும்

டான்செட் நுழைவுத் தேர்வு அல்லது அகில இந்திய அளவில் நடத்தப்படும் கேட் தேர்வில் தேர்ச்சி அவசியம்.

மும்பையிலுள்ள தி இன்ஸ்டிட்யூட் ஆஃப் கெமிக்கல் டெக்னாலஜியில் கெமிக்கல் இன்ஜினீயரிங் மற்றும் தொழில் நுட்பத்தில் இளநிலைப் பட்டப் படிப்புகளில் சேர விண்ணப்பிக்க முடியும். இதில் டை ஸ்டப் டெக்னாலஜி,



ஃபைபர்ஸ் அண்ட் டெக்ஸ்டைல் ப்ராஸசிங் போன்ற பல பிரிவுகள் உள்ளன. இந்தப் படிப்பில் சேர வேண்டுமானால், அகில இந்திய அளவில் நடத்தப்படும் பொறியியல் நுழைவுத் தேர்வில் (AIEEE) தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும்.

விவரங்களுக்கு: http://www.ictmumbai.edu.in

**கெமிக்கல் இன்ஜினீயரிங் படிக்க, சென்னை அண்ணா பல்கலைக்கழகம் நடத்தும் டான்செட் என்ட்ரன்ஸ் எக்ஸாமிலும் அகில இந்திய அளவில் நடக்கும் கேட் எக்ஸாமிலும் தேர்ச்சி அவசியம்!**

### மெடிக்கல் நானோ டெக்னாலஜி

**எ**ந்தப் பொருளையும் அதன் தேவை, அவசியத்தைப் பொறுத்து வடிவத்தின் தற்போதைய நிலையில் இருந்து மிகச் சிறியதாக்குவதே நானோ டெக்னாலஜி. மருத்துவத் துறையில் நானோ டெக்னாலஜியின் பங்களிப்பு மிக முக்கியமானது.

மனிதனின் உடலுக்குள் சென்று உறுப்புகளின் அமைப்புகள், செயல்பாடுகளைக் கவனிப்பது வரை மைக்ரோஸ்கோபிக் ரோபோக்கள், சென்சார்கள், கேமராக்கள் மற்றும் பிற கருவிகளின் பயன்பாடுகள் மிக அதிக அளவில் அதிகரித்திருக்கின்றன. இவை எல்லாமே நானோ டெக்னாலஜியின் உபயத்தால் தான்.

உடலில் உள்ள மூலக்கூறு அளவிலான மிக நுண்ணிய செல்லின் செயல்பாடுகளைக் கண்காணிக்க, கட்டுப்படுத்த, சீராக்க மெடிக்கல் நானோ டெக்னாலஜி பயன்படுகிறது. இதற்காகச் சிறிய நானோ கருவிகள் வடிவமைக்கப் படுகின்றன. மருத்துவத் துறையில் ஏற்பட்டிருக்கும் மிகப் பெரிய வளர்ச்சி, பெருகி வரும் நோய்களைக் கருத்தில் கொள்ளும்போது வருங் காலத்தில் மெடிக்கல் நானோ டெக்னாலஜியின் தேவை மிக அதிக அளவில் இருக்கும். நானோ மெஷின்கள், நானோ ரோபோக்கள், மைக்ரோமெஷின்களின் உற்பத்தி அதிகரிக்கும் போது, இந்தத் துறையில் வேலைவாய்ப்பும் அதிகரிக்கும்.

தற்போது தமிழ்நாட்டில் தஞ்சாவூர் சாஸ்த்ரா பல்கலைக் கழகத்தில் ஐந்து ஆண்டுகள் ஒருங்கிணைந்த படிப்பாக மெடிக்கல் நானோ டெக்னாலஜி படிப்பு கற்றுத்தரப்படுகிறது.

அருள்வாக்கு

# இன்பம்



ஆத்மாவின் சாந்தம், சூன்யமாகச் சாவிலும் தூக்கத்திலும் இருக்கிற மாதிரியான சாந்தம் அல்ல. புத்தர் சொன்ன நிர்வாணம் சூன்யத்தின் சாந்தம்தான். ஆனால், நம்முடைய சங்கர பகவத் பாதர்கள் உபநிஷத்துக்களின் ஆதாரத்திலிருந்து காட்டியது என்னவென்றால், ஸமாதி நிலையில் அடைகிற ஆத்ம சாந்தமென்பது ஆனந்தமயமானது, ஞானமயமானது என்பதே. அது பூர்ணாநுபவம். சூன்யாநுபவமில்லை. செத்த பின்னும் அழியாத உயிர்த் தத்வமாயுள்ள ஆத்மா ஞானமயமாயும், ஆனந்தமயமாயும் இல்லாமல் வேறெப்படி இருக்க முடியும்? ஆத்மா ஞானமயம் என்பது எப்படி என்றால், உயிருள்ளதாக ஒன்றைச் சொல்வதே அது வெறும் ஜடமாயில்லாமல் அறிவும் உணர்ச்சியும் பெற்றிருப்பதைக் கொண்டுதான் அல்லவா? எனவே, உயிருக்குமுயிராயுள்ள ஆத்மா என்பது அறிவும் உணர்ச்சியும் ஒன்றாகிவிட்ட சைதன்யமயமாயிருப்பதுதானென்பது நிச்சயமாகிறது. இதைத்தான் ஞானம் என்பதும்.

ஆத்மா எதனோடும் நேராக ஸம்பந்தப்படாமலிருக்கிறது. ஆனபடியால் அது அறிவதற்கும், உணர்வதற்கும் வெளி வஸ்து எதுவுமில்லை. எனவே, அது எதை அறியும், உணரும் என்றால் தன்னையே தான் அறிந்துகொள்வதாயும் உணர்ந்து கொள்வதாயுமிருக்கும். வேறு மனஸோ, இந்த்ரியமோ கிட்டேபோய் அறிந்து கொள்ள முடியாத ஆத்மாவை அந்த ஆத்மா மட்டும்தான் தெரிந்துகொண்டிருக்கிறது. ஸமாதியில் மனஸ் 'டப்'பென்று நின்று விட்டவுடன் இப்படித் தன்னைத்தானே தெரிந்து கொள்ளும் ஆத்மாநுபவம் உண்டாகிறது. தூக்கத்தில் ஆத்மாநுபவம் தெரிவதில்லை.

'ஆத்மா ஆனந்தமயம் என்பது எப்படி?' என்றால் 'வேறெப்படி அது இருக்க முடியும்?' என்று திருப்பிக் கேட்கத் தோன்றுகிறது. கட்டுப்பாடே இல்லாமல் பரம ஸ்வதந்திரமாய் உள்ள ஒன்று ஆனந்தமாயில்லாமல் வேறு எப்படி இருக்க முடியும்? ஆசைகளைக் கொண்டு மனஸ் போடும் கட்டு, இந்த்ரியக் கட்டு, மற்ற மநுஷ்யர்கள் - இடம்-பொருள்-ஏவல் இவற்றின் கட்டு, கர்மபந்தம், ஸம்ஸாரபந்தம் ஆகியவற்றால்தான் நாம் துன்பப்படுவது - இந்த எதுவும் ஆத்மாவுக்கு இல்லை. அதே ஸமயத்தில் அது அறிவோ உணர்ச்சியோ இல்லாததாயுமில்லாமல் சைதன்யமயமாய், சிக்கனமாய் இருக்கிறது. எனவே, தனது கட்டுப்பாடற்ற நிலையை அது உணர்ந்து அறியவும் செய்யும். இப்படிப்பட்ட பரம ஸ்வாதந்த்ரிய அநுபவமானது பேரானந்தமாகத்தானே இருக்கும்?

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

## மேஷம்

எதிலும் வெற்றி கிட்டும். கடன் சுமையி லிருந்து விடுபடுவீர்கள். கடல்கடந்து செல்லும் வாய்ப்பு வந்து சேரும். உடல் ஆரோக்கியம் பாதிக் காது. இல்லற வாழ்வு மகிழ்ச்சியளிக்கும். நீண்ட காலம் முடிவு பெறாமல் இருந்து வந்த வழக்கு வெற்றி தரும். குழந்தை களால் மன சந்தோஷம் கிட்டும். வீடு / மனை வாங்க சிறந்த தருணம். வரவேண்டிய பணம் வந்து சேரும்.

## மிதுனம்

மேன்மையான பலன் கள் தரும் வாரம். சுபகாரியப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். கடல்கடந்து செல்லும் பாக்கியம் உண் டாகும். ஆரோக்கியம் நன் றாக இருக்கும். வேலையில் மாற்றம் ஏற்படும். சுபச் செலவுகள் உண்டாகும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். தாயின் உடல் நிலை பாதிக்கும். வேலைப் பளு அதிகரிக்கும். வழக்கு வெற்றிபெறும். ஆஞ்ச நேயரை வழிபட நல்ல பலன் கிடைக்கும்.

## சிம்மம்

தன யோகம் கிட்டும். சுபச் செலவு உண்டாகும். பூர்வீக சொத்து, பாகப் பிரிவினை ஆகும். நண்பர் கள் விட்டு விலகிச் செல்ல நேரிடும். உடன்பிறந்தவர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். உல்லாசப் பயணம் மேற் கொள்வீர்கள். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். நீண்ட தூரப் பிரயாணம் தேடி வரும். ராகு / கேதுவை வழிபாடு செய்து வர சங் கடங்கள் தீரும்.

# நடக்குமென்பார்

## ரிஷபம்

சத்ருக்களை வெல்லும் வாரம். மனசஞ்சலம் தீரும். வீட்டைக் குறித்தோ, குழந் தைகள் குறித்தோ கவலை கள் விலகும். உடல்நிலை யில் சற்று முன்னேற்றம் ஏற்படும். குழந்தையை விட்டு விலகிச் செல்ல நேரிடும். வியாபாரத்தில் கணக்கு வழக்குகளைச் சரி பார்த்துக் கொள்வது குழப் பத்தைத் தவிர்க்கும். வாக னத்தில் செல்லும்போது கவனம் தேவை. ராகு / கேதுவை வழிபட்டு வர சங் கடங்கள் தீரும்.

## கடகம்

மனத்தில் உற்சாகம் பிறக்கும். நினைத்தது எல் லாம் கைகூடும். தேர்வில் நல்ல மதிப்பெண்கள் வாங்குவீர்கள். பதவி உயர்வு கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக் கும். மன தைரியம் அதிகரிக் கும். வீடு மாற்றம் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். திருமணப் பேச்சு வார்த்தை பலன் தரும். படிப்பில் நல்ல முன்னேற் றம் உண்டாகும். குரு வழிபாடு செய்து வர நற் பலன் அதிகரிக்கும்.

## கன்னி

மறைமுக எதிர்ப்புகள் அதிகரிக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்கும். வாக்கு வாதம் தவிர்க்கவும். வர வேண்டிய பணம் கால தாமதம் ஆகும். வீடு மாற் றம் உண்டாகும். கணவன் - மனைவிக்குள் அனுசரித்துப் போவது நல்லது. குழந் தைகள் மூலம் சந்தோஷம் உண்டாகும். படிப்பில் கவனம் தேவை. தாயின் உடல் நிலை பாதிக்கும். ராகு / கேது / குரு / சனியை வழி பாடு செய்து வர கஷ்டங்கள் விலகும்.

## துலாம்

திருமண காரியம் நிறைவேறும். மனநிறைவு உண்டாகும். குழந்தை பாக்கியம் கிட்டும். பூமி மூலம் ஆதாயம் உண்டாகும். சுபச் செலவு அதிகரிக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நீண்ட தூரப் பிரயாணம் தேடி வரும். மகான்களின் தரிசனம் கிட்டும். வர வேண்டிய பாக்கிகள் வந்து சேரும். கடன் சுமை தீரும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். வழக்கு வெற்றி பெறும். ஆஞ்சநேயர் வழிபாடு நற்பலனை அளிக்கும்.

## தனுசு

தொழில்துறையில் நல்ல அனுகூலம் ஏற்படும். கணவன் - மனைவிக்குள் இருந்து வந்த மனக்கசப்பு விலகும். குழந்தை பாக்கியம் உண்டாகும். கடன் சுமை குறையும். வழக்கு வெற்றி அளிக்கும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். வருமானத்துக்குக் குறைவு இருக்காது. குழந்தைகள் வழியில் சுபச் செலவு உண்டாகும். வரவேண்டிய நிலுவைகள் வந்து சேரும். வாக்கு வன்மை மேலோங்கும்.

## கும்பம்

ஆரோக்கியத்தில் கவனம் செலுத்துவது நல்லது. தந்தையின் உடல் நிலை பாதிக்கும். தேவை இல்லாத கடன் சுமை உருவாகும். எதற்கும் ஆசைப் படாமல் இருப்பது நல்லது. படிப்பில் கவனம் செலுத்தவும். நீண்டகால நிலுவை வந்து சேரும். தொலைதூர மனிதர்கள் மூலம் அனுகூலம் உண்டாகும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். சனி பகவானை வழிபட சங்கடங்கள் தீரும்.

# நடக்கும்!

03.10.2010 முதல் 09.10.2010 வரை

தஞ்சை பரத்வாஜ்

## விருச்சிகம்

உடல் நிலையில் கவனம் தேவை. கொடுக்கல் வாங்கலில் அதிக கவனம் தேவை. கடன் சுமை தீரும். படிப்பில் கவனமும் தேவை. ஞாபக மறதி ஏற்படும். நெருங்கிய கூட்டாளிகள் விட்டு விலகிச் செல்ல நேரிடும். தொழில் துறையில் நல்ல வருமானம் கிட்டும். உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். அநாவசியமான செலவு ஏற்படும். ராகு / கேதுவை வழிபாடு செய்துவர சங்கடங்கள் விலகும்.

## மகரம்

ரொம்பவும் அற்புதமான பலன் நிறைந்த வாரம். ஆடை ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். உல்லாசப் பிரயாணம் செல்ல நேரிடும். உறவினர்கள் / நண்பர்கள் மூலம் ஆதாயம் உண்டாகும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். தடைபட்டு வந்த திருமணம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். இல்லற வாழ்வு மகிழ்ச்சியாக இருக்கும். பணப் பிரச்னை இருக்காது. வரவேண்டிய நிலுவைகள் வந்து சேரும்.

## மீனம்

உத்தியோகத்தில் இட மாற்றம் உண்டாகும். சிலருக்கு வீடு மாற்றம் உண்டாகும். வித்தையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். உத்தியோக உயர்வு ஏற்படும். உறவினர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். தூரதேசத்திலிருந்து நல்ல தகவல் வரும். சுபகாரியப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். வழக்கு வெற்றி பெறும். குரு / சனியை வழிபட நற்பலன் கிடைக்கும்.

கண்ணாடித்தொட்டியில் நீந்தும்
மீன்களில் வளர்ந்த மீனொன்றின்
வாலில் எவரோ
தூரிகை பொருத்திப்
போயிருக்கிறார் என்றும்
அது இன்னபிற குட்டி மீன்களுக்கு
வண்ணம் பூசிவிடுகிறதென்றும்
நினைத்துக்கொள்ளும் அச்சிறுமி
கண்ணாடித் தொட்டிக்கு
சில நிமிட நேரம் முத்தமிட்டுத்
திரும்புகிறாள்
சிவந்த தம் உதடுகளை
உலகுக்குக் காண்பிக்க

- பா.ராஜா

பிணத்தைப்
போர்த்தியிருந்த
மலர்கள் சொல்கின்றன
'ஓர் அனுபவத்தை
அலங்கரிக்கிறேன்'

- குடந்தை கோ.பாலமுருகன்

அடைமழையில்
வீட்டைவிட்டு
வெளியே வரமாட்டேனென்று
அடம்பிடிக்கிறாய்
எப்படியும்
முகம் பார்த்துவிட
உன் அறை ஜன்னல் வழி
உள்ளே கசியும்
நீர்த்திவலைகள்

- சிவபாரதி

'கவிதை கஃபே' பகுதியில் இடம்பெறும்
கவிதைகளுக்கு சன்மானம் உண்டு

வாசகர்களே! உங்க க்யூட் கவிதைகளைச் சீக்கிரமா 'கவிதை கஃபே'ன்னு

# கவிதை கஃபே

## ஜன்னலுக்குள் கசியும் மழை!

முன்பொரு நாள்
சொன்ன கதையை
முழுதாய்த் திருப்பிச்
சொல்லி வந்தவன்
முடிவைச் சற்று
மாற்றிச் சொல்லியதில்
தெனாலிராமன்
தம் தவறை
அப்படியே
ஒப்புக்கொண்டிருந்தான்
அரசனிடம்

கதைகளிலும்
கபடமில்லாமல்
இருக்கின்றனர்
குழந்தைகள்

- செல்வராஜ் ஜெகதீசன்

தொடுத்துச் சூடும்
அளவற்றிருப்பினும்
வரவேற்பறையைத்
தம் வாசனையால் நிறைக்கச்
சாத்தியமாகிறது
தோட்டத்துச் செடியில் மலர்ந்த
ஐந்தாறு மல்லிகைகளுக்கு

- நிலாமகள்

நாம் எப்போது வேண்டுமானாலும்
கொல்லப்படலாம்
கொல்லப்படுவதற்கான
நியாயமான காரணங்கள்கூடச்
சொல்லப்படத் தேவையில்லை
தப்பிக்க வேண்டுமெனில்
வார்த்தைகளுக்கு
வண்ண ஆடைகள் அணிவிக்கும் சாதுர்யம்
கைவரப் பெற வேண்டும்
நம்மைக் கண்காணிப்பவரின்
மூளை காவி நிறமெனில் காவியும்
கறுப்பெனில் கறுப்பும்
சிவப்பெனில் சிவப்பும்
வெள்ளையெனில் வெள்ளையும்
நமக்கென்று தனித்த நிறம் கூடாது.
சற்று நாட்களுக்கு முன்
ஒருவனைக் கொலை செய்தான்
சமீபத்தில் மேலும் ஒருவனைக்
கொலை செய்தான்
நம்மைக் கொலை செய்வதற்கு முன்
நம் மூளையை வழித்து
அவன் காலடியில் வைத்து
விடுவோமாக

- யாழினி முனுசாமி

குறிப்பிட்டு அனுப்புங்க... kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.





ஒரு விளம்பரப் படத்தில் நான்கு மணி நேரம் நடிப்பதற்காக நாற்பது லட்சம் ரூபாய் சம்பளம் வாங்கியிருக்கிறாராம் வேலாயுதம் நாயகி ஜெனிலியா. (இந்தப் பணம் போதுமா... இன்னும் கொஞ்சம் வேணுமா?)

ஒன்றிலிருந்து ஒன்றரை கோடி வரை சம்பளம் வாங்கும் தமன்னா தொடர்ந்து இரண்டு படங்களில் தன்னை ஹீரோயினாக புக் பண்ணும் படக் கம்பெனிக்குச் சம்பளத்தில் பாதியைக் குறைத்துக் கொள்ளும் புதிய திட்டத்தை அறிமுகப் படுத்தியிருக்கிறாராம். (தீபாவளிக்கு ஏதாவது தள்ளுபடி அறிவியுங்க அம்மணி)

"எனக்கு தமிழில் படம் இல்லை தான். ஆனாலும், கிராமத்துப் படங்களில் நடிக்க மாட்டேன். ஏன்னா, மலையாளத்துல "நான் ரொம்ப பிஸி." இது அழகர்சாமி குதிரை படத்தின் நாயகி சரண்யா மோகன் ஸ்டேட்மெண்ட். (ஆக்சுவலா படத்துல குதிரைங்கறது யாரு?)

விஜய் நடிக்க இருக்கும் 'பகலவன்' படத்துக்கான திரைக்கதை முழுவதையும் சிறையிலேயே எழுதி முடித்துவிட்டாராம் இயக்குநர் சீமான். இதில் தமிழ் ஈழ ஆதரவு கருத்துகள் இருக்குமாம். ராகுல்காந்தியோடு சந்திப்பு, கொழும்புவுக்குப் போன



## கோடம்பாக்க குர்குரே...

அசினை 'காவலன்' படத்தில் தமக்கு ஜோடியாக்கியதால் எழுந்த பிரச்னை... போன்றவற்றால் தமிழ் மக்களிடையே விழுந்த தம் இமேஜை இந்தப் படம் தூக்கி நிறுத்தும் என எதிர்பார்க்கிறார் விஜய்! (எதிர்பார்ப்புக்கு ஏத்த மாதிரி படத்தைக் கொடுங்க தளபதி!)

''மலையாள இயக்குநர் சித்திக் போல ஹியூமர் நாலெட்ஜ் உள்ள இயக்குநர்கள் தமிழ் சினிமாவில் குறைவு. வேண்டுமானால், கே.எஸ். ரவிக்குமார், சுந்தர்.சி. ஆகியோரைக் குறிப்பிடலாம்'' என்கிறார் வடிவேலு.

(வைகைபுயலு மலையாள கடற்கரை பக்கம் வீசுதே... ஏன்...?)

## மணிநேரம்
## 0 இலட்சம்!

லிங்குசாமியின் 'வேட்டை'யில் முதலில் நடிக்க இருந்தது சிம்புதானாம். ஆனால், அவர் விஜய்க்குக் கதை சொல்வதிலேயே குறியாக இருந்ததால், அப்செட் ஆன சிம்பு, 'வானம்' ஆரம்பித்தார். இப்போது வேட்டையில் விஜய்க்கு பதில் ஆர்யா. 'வேட்டை மன்னன்' என்ற டைட்டிலில் தாமே ஒரு படத்தை ஆரம்பித்துவிட்டாராம் சிம்பு!

(சிம்புன்னாலே வம்பு தானோ?)

- மகிமைராஜன்

### உனக்கு நான்; எனக்கு நீ!


* கே.எஸ்.ஆர்

''நான் 'பொடா'விலிருந்து வெளியே வந்ததும் கருணாநிதி என்னிடம் 'எதிர்காலத்தில் நீதான் தி.மு.க.' என்றார்'' என்று வைகோ அவரது கட்சி மாநாடு காஞ்சிபுரத்தில் நடந்தபோது பேசினார். 'அது பொய்' என்று சொல்லி வைகோ வைச் சாடி முரசொலி ஒரு கட்டுரை வெளியிட்டிருந்தது. அதை எழுதியவர் ம.தி.மு.க.விலிருந்து தி.மு.க.வுக்கு வந்த வழக்கறிஞர் கே.எஸ். ராதா கிருஷ்ணன். தி.மு.க.வைப் பொறுத்தவரை ஒரு எழுதப்படாத கொள்கை வைத்திருக்கிறார்கள். விஜய காந்த்தைத் தாக்கி அறிக்கைவிட ஆர்க்காட்டார், டாக்டர் ராமதாஸைத் தாக்கி அறிக்கை விட அமைச்சர் பொன்முடி, வைகோவைத் தாக்க கே.எஸ்.ராதா கிருஷ்ணன். இத்தனைக்கும் கே.எஸ்.ஆர். ம.தி.மு.க. விலிருந்தபோது வை.கோவுக்கு மிகவும் நெருக்கமானவர்..

### ஏறுமுகத்தில் கலைராஜன்!

அ.இ.அ.தி.மு.க.வில் யாருக்கு எப்போது பதவி கிடைக்கும் அல்லது பறிக்கப்படும் என்று சொல்ல முடியாது. இது சசிகலா உறவினர்களுக்கும் பொருந்தும். தஞ்சாவூர், திருவாரூர் மாவட்ட கட்சிப் பொறுப்பாளர், இளைஞர், இளம்பெண்கள் பாசறையின் மாநிலச் செயலாளர் என்று இரு பொறுப்புகளை வகித்தார் டாக்டர் வெங்கடேஷ். இவர்



# சிவாஜியை மறந்த நடிகர் சங்கம்!


* சந்திரசேகரன்

சிவாஜி 2001ல் மறைந்தபோது அவருக்கு மணிமண்டபம் கட்ட 12 கிரவுண்டு அரசு நிலத்தை, இலவசமாக அடையாறு பகுதியில் ஒதுக்கித் தந்தார் அப்போது முதல்வராக இருந்த ஜெயலலிதா. ஆனால், நிலம் தென்னிந்திய நடிகர் சங்கத்துக்குக் கொடுக்கப்பட்டு இத்தனை வருடங்களாகியும் நிலத்தில் பூஜை போடப்பட்டதே தவிர கட்டட வேலை தொடங்கவில்லை. தி.மு.க, தனது தேர்தல் அறிக்கையில் சிலையும் மணிமண்டபமும் அமைக்கப்படும் என்று சொல்லியிருந்தது. ''சிலை அமைத்துவிட்டார் கலைஞர். ஆனால், மணிமண்டபம் கட்டும் பொறுப்பு தென்னிந்திய நடிகர் சங்கத்தைச் சேர்ந்தது என்று தமிழக அரசு மௌனம் காக்கிறது. நடிகர் சங்கத்தை நம்பிப் பயனில்லை என்று தெரிகிறது. எனவே, தமிழக அரசே மணிமண்டபம் கட்டித் தர வேண்டும். அக்டோபரில் சிவாஜி பிறந்தநாள் வருகிறது. அப்போதே வேலையைத் தொடங்க வேண்டும்'' என்கிறார் சிவாஜி சமூக நலப் பேரவை தலைவர் சந்திர சேகரன்.



தினகரன் மனைவி அனுவின் சகோதரர். இப்போது பரமபதத்தில் கீழே இறக்கி விடப்பட்டிருக்கிறார். கட்சிப் பதவிகள் பெறுவதற்காக வெங்கடேஷை 'நன்கு' கவனித்து வந்த கட்சிப் பிரமுகர்கள் 'போச்சே... போச்சே' என்று புலம்புகிறார்கள்.

பாசறைக்குப் புதிய மாநில செயலாளராக சட்டமன்ற உறுப்பினர் கலைராஜனுக்குப் பரமபத ஏணியில் ஏறும் வாய்ப்பு. 'தேர்தல் வரும் சமயத்தில் சசிகலா குடும்ப உறுப்பினர் களை ஒதுக்கிவைப்பார் அம்மா. ஆட்சிக்கு வந்துவிட்டால் அவர்கள் ராஜ்யம்தான்'' என்கிறார் எம்.ஜி.ஆர். காலத்து பிரமுகர்.


கலைராஜன்



## ஒரு இலட்சம்... ஒரு பதவி!

சென்னை மாநகராட்சி வட்டாரத்தில் இப்போது பரபரப்பாகப் பேசப்படுவது துப் புரவுப் பணியாளர் (ஸ்வீப்பர்) நியமனம் பற்றித்தான். மொத்தம் 300க்கும் மேற்பட்ட காலியிடங்களை நிரப்பப் போகிறார் களாம். ஒரு கவுன்ஸிலருக்கு இரண்டு இடங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. கட்சி வேறுபாடு இல்லாமல் எல்லா கவுன்ஸிலர் களும் ஒதுக்கப்பட்ட இடங்களை, ஒரு லட்சம்வரை விற்று வருவதாகச் சொல் லப்படுகிறது. முன்பெல்லாம் தெலுங்கு பேசும் அருந்ததியர்கள்தான் இவ்வேலைக்கு வருவார்கள். அரசு வேலையாயிற்றே... இப் போது எல்லா ஜாதியினரும் முட்டி மோது கிறார்கள். இருபது மணி நேரம் நகர வளர்ச்சிக்காக உழைத்து நல்ல பெயர் வாங்கிவரும் மேயர் சுப்பிரமணியம், துப்புரவுப் பணியாளர் நியமன விஷயத் தில் வெளிப்படை யாக நடந்து கொள்ள வேண்டும் என்கிறார் கள்.



## வந்துவிட்டார் நட்சத்திரப் பேச்சாளர்!

மிகக் குறுகிய காலத்திலேயே தி.மு.க. வின் நட்சத்திரப் பேச்சாளர் ஆகி விட்டார் குஷ்பு. ''பேராசிரியர் சொன் னார்; ஆற்காட்டார் சொன்னார்'' என்று மேற்கோள் காட்டிப் பேசும் முதல் வர் கருணாநிதி 'குஷ்பு பேசியதைப் போல' என்று நாகர்கோவில் முப்பெரும் விழாவில் பேசி யது கட்சிப் பிரமுகர்களுக்கு வியப்பையும், குஷ்புவுக்குக் கிலியையும் கூட்டியிருக் கிறது. ஒரு காலத்தில் அ.தி.மு.க.வில் இருந்த லியாகத் அலிகான் என்ற கவிஞர் - பேச்சாளர் தான் இப்போது குஷ்பு வின் ஸ்கிரிப்ட் ரைட் டராம். 'அவருக்கு இலட்ச ரூபாய்' சன்மானம்கூட தரும்' என்று சொல் கிறார் நாகர்கோயில் மாவட்ட உடன்பிறப்பு ஒருவர்.





**- சஞ்சயன்**

# பாலிடிக்ஸ் பஜார்

சென்னை மாநகரத்தின் இரு சக்கர வாகன மெக்கானிக்குகள் சிலருக்கு அதி வேகமாக பைக் ஓட்டுவதில் வெறித்தன மான ஈடுபாடு. ஆனால், இவர்களுக்கு இருங்காட்டுக் கோட்டையில் நடக்கும் மோட்டார் பைக் ரேசில் கலந்துகொள் ளும் அளவுக்கு வசதியோ, வாய்ப்போ கிடையாது. எனவே, இத்தகைய மெக் கானிக்குகள் சிலர் ஒன்று சேர்ந்து தங் களுக்குள்ளேயே ரேஸ் நடத்தி, ஜெயிப் பவருக்குப் பத்தாயிரம், இருபதாயிரம் என்று பரிசளித்துக் கொள்வார்கள். இவர்கள் அநேகமாக இரவு நேரங் களிலும், ஞாயிற்றுக்கிழமைகளில் அதி காலை நேரங்களில்தான் இந்த ரேஸ் களை நடத்துகிறார்கள். இந்தப் பந்தயங் களில் பங்கேற்று விபத்துக்குள்ளாகி, கை, கால் முடமாகிப்போனவர்களும் உண்டு. சென்னை மாநகரக் காவல்துறை, இத்தகைய அனுமதி பெறாத ரேஸ்களைத் தடைசெய்துள்ளது.

இரண்டு மற்றும் நான்கு சக்கர வாகனங்களுக்கு இந்திய மோட்டார் வாகனச் சட்டப்படி இன்சூரன்ஸ் கட்டாயமாகும். இதற்கு என்ன காரணம்? ''நீங்கள் வாகனம் ஓட்டிச் செல்லும்போது, எதிர் பாராத விதமாக விபத்து ஏற்படலாம். அதனால் உங் களுக்கும், உங்கள் வாகனத்துக்கும் மட்டுமின்றி மூன்றாவது நபர்களுக் கும்கூட பாதிப்பு ஏற்படலாம். அப் போது சம்பந்தப்பட்டவர்களுக்கு நஷ்டஈடு வழங்குவது அவசியமா கிறது. இந்த நஷ்ட ஈடு சாதாரணமாகத் தனி நபர்களுக்குப் பெரும் சுமையை ஏற் படுத்தும்; அதற்காக வாகனங்களைக் காப்பீடு செய்வது சட்டப்படி கட்டாயமாக்கப்பட்டுள்ளது. அனைத்துத் தரப்பினருக்கும் நஷ்டஈடு வழங்கும் வகையில் ஒருவர் வாகன இன்சூரன்ஸ் எடுக்க வில்லை என்றாலும்கூட, விபத்தில் பாதிக்கப்படும் மூன்றாவது நபருக் கும் நஷ்டஈடு வழங்க ஏதுவாகக் குறைந்தபட்சம் மூன்றாம் நபர் காப் பீடாவது எடுக்க வேண்டியது கட்டா யம்'' என்கிறார் சென்னை மேற்கு வட் டாரப் போக்குவரத்து அதிகாரி கார்த்த லிங்கன்.


* கார்த்தலிங்கன்

ஹைதராபாத்தில் சுதாகர் என்பவர் 'சுதா கார் மியூஸியம்' வைத்திருக்கிறார். அதில் கிரிக்கெட் பந்து, கம்ப்யூட்டர், கத்தரிக்காய், ஹெல்மெட், கேமரா, சூட்கேஸ் என்று விதவிதமான உருவங்களில் கார்களை உருவாக்கி இருக்கிறார். அந்த வரிசையில் அவர் பேனா, கிரிக்கெட் மட்டை, மாடல்களில் சில இரண்டு சக்கர வாகனங்களையும் உருவாக்கி இருக்கிறார். தவிர, சமூக அக்கறையுடன் புகை ஒழிப்பு தினம், எய்ட்ஸ் விழிப்புணர்ச்சி போன்றவற்றுக்காக சிகரெட் உருவங்களிலும் கூட மோட்டார் பைக்குகளை உருவாக்கி இருக்கிறார். மேலும், இவரது கலெக்ஷனில் ஒரு குட்டி மோட்டார் சைக்கிள்கூட உள்ளது. அந்தச் சின்னஞ்சிறு பைக்கில் அமர்ந்து இவர் ஓட்டிக் காட்டியபோது, பார்க்க வித்தியாசமாக இருந்தது.






# வித்தாச்சு ஆனா விக்கலை!

சமீபகாலமாகப் பழைய இரு சக்கர வாகனங்களை எக்ஸ்சேஞ்சில் கொடுத்துவிட்டு, புதிய வாகனங்கள் வாங்குவது அதிகரித்து வருகிறது. அப்போது, பழைய வாகனத்தை விற்பதற்கான படிவங்களில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தவுடன், தங்கள் கடமை முடிந்துவிட்டதாகப் பலரும் நினைத்துவிடுகிறார்கள். இது தவறு மட்டுமில்லை; ரிஸ்கானதும்கூட. உங்கள் பழைய வாகனத்தை வாங்குகிறவர், உடனடியாக அதைத் தன் பெயருக்கு மாற்றிக்கொள்ள வேண்டியது அவசியம். சமூக விரோதிகள் யாராவது வாங்கி, கடத்தல், வெடிகுண்டு போன்ற செயல்களுக்குப் பயன்படுத்தினால், காவல் துறை முதலில் உங்கள் வீட்டுக் கதவைத்தான் தட்டும். எனவே, விற்பனையாளரிடமிருந்து உங்கள் வாகனத்தை வாங்கியது யார் என்று கேட்டறிந்து அவரிடம் வாகன உரிமையாளர் பெயர் மாற்றம் செய்துவிட்டார்களா? என்பதை உறுதிபடுத்திக் கொள்ளுங்கள்.

**- மௌலி**

**இடம்பெறும் ஒவ்வொரு அனுபவத்துக்கும் ரூ.50 சன்மானம் உண்டு!**



சரஸ்வதி

எல்லோரும் பயப்படுகிற ராகு காலம்தான் என்னோட செண்டிமெண்ட். இது வரையில் ராகு காலத்தில் நான் செய்த செயல்கள் யாவுமே எனக்கு வெற்றியைத் தந்திருக்கின்றன. அதற்குக் காரணம் நான் பிறந்த வேளை (வெள்ளிக்கிழமை பத்தரை மணி முதல் 12 மணி வரை)தானோ? நானறியேன். எங்கு புறப்படும் முன்பும் 'வேயுறு தோளிபங்கன்' என்ற கோளறு பதிகத்தைப் பாடிச் செல்வேன். இது 'சரியான ராகு காலம்' என்று என் காது படவே பலரும் முணுமுணுத்திருக்கின்றனர்.

- ஆர். சரஸ்வதி, மன்னை



ஹேமாமாலினி

செண்டிமெண்டில் அரைகுறை நம்பிக்கையாக இருந்த எனக்கு கறுப்பு, அடர் நீலம் (Navy Blue), இரண்டு நிறமும் ராசியாகிவிட்டன! முதன் முதல் என்னைப் பெண் பார்க்க வந்தவர் என் கணவர்தான். அன்று நான் உடுத்திய புடைவையும், அடர் நீலம். முதல் வரனே, க்ளிக் ஆனதால் அந்த நிறம் எப்போதுமே எனக்குப் பிடிக்கும். நல்ல நம்பிக்கையையும் தருகிறது. அந்த நிறத்தில் எந்த உடை உடுத்திக் கொண்டு போனாலும் போகும் காரியம் ஜெயம்தான்.

- இ.டி.ஹேமாமாலினி, சென்னை

எங்கள் வீட்டில் யார் வெளியூர் சென்றாலும் பிள்ளையார் கோயிலில் தேங்காய் ஒன்றை உடைத்துச் செல்வோம். தடையின்றிப் பயணம் நலமாக இருக்கும்.

இதேபோல யாருக்கு உடம்பு சரியில்லை என்றாலும் மயிலை முண்டகக் கண்ணி திருமண்ணைப் பூசினால் சரியாகிவிடும். எங்கள் இல்லத்தில் இரு மருத்துவர்கள். அவர்களுக்கே உடல்நிலை சரியில்லை எனில் அம்மன் விபூதி பூசி வேண்டிக்கொள்வேன். யார் பயணம் மேற்கொண்டாலும் திருநீறு சிறிது மடித்து உடன் அனுப்புவேன். என் கைப்பையில் அம்மன் திருமண் இல்லாது இருக்காது.

- லக்ஷ்மி வாசுதேவன், சென்னை

செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் மிளகாய்ப் பொடி அரைக்கக்கூடாது என்று மாமியார் சொன்னதை இன்றளவும் கடைபிடிக்கிறேன். மூன்று பேராக வெளியில் கிளம்பத் தடை. எதைக் காணவில்லை என்றாலும் அரைக் காசு அம்மனுக்கு வெல்லம் வைத்து வேண்டிக்கொள்வது வீட்டில் அனைவர்க்கும் ஆன செண்டிமெண்ட். எங்கள் வீட்டில் பணமாகவோ பொருளாகவோ யார் எதைத் தந்தாலும் அதை குரு பாதத்தில் வைத்த பின்தான் எடுத்துக்கொள்வோம்.

- அபிதா சுப்ரமணியன்,

தெற்கு பார்த்து எந்தக் காரியமும் செய்ய மாட்டோம். அரிவாள் மனைகூட தெற்கு பார்த்து வைத்துக் கறிகாய் நறுக்க விட மாட்டார் பாட்டி. அரிசி டப்பாவில் அரிசியைக் கொட்டும் போது 'அக்ஷயம் அக்ஷயம்' என்று கூறித்தான் கொட்டுவோம். பாட்டி மறைந்து விட்டார். ஆனால் நம்பிக்கைகளை இன்றும் நாங்கள் விடவில்லை. ஊருக்குப் போவதாயிருந்தால் நமஸ்காரம் செய்துவிட்டுக்

வாசகர்களே! உங்களோட செண்டிமெண்ட்! குடும்ப நம்பிக்கைகள் என்ன?
எழுதுங்க... kalki@kalkiweekly -க்கும் அனுப்புங்க.

# தெற்கு ஆகாது!

இளம்புவோம். எங்கள் பாட்டி ஸ்வாமி அலமாரியிலிருந்து சுதர்ஸன ஹோமம் போன்றவற்றின் விபூதியை வைத்திருப்பார். இளம்பும்போது அவரிடம் நெற்றியைக் காட்டுவோம். அவர் இட்டு விடுவார்.

- இரா. வேதவல்லி,
சென்னை

செண்டிமெண்ட்

கபில்தேவுக்கு என்று சொந்தமான தி ஹரியானா ஹரிகேன் என்கிற நிறுவனம், விளையாட்டு மைதானங்களுக்கு விளக்குகள் அமைக்கும் வேலையைச் செய்து வருகிறது. 'காமன்வெல்த் கேம்ஸ் போட்டிகளில் உங்கள் நிறுவனத்தின் பங்களிப்பு ஏன் இல்லை?' என்று கபில் தேவிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர் சொன்ன பதில் - 'என் வியாபாரத்துக்கு என்று ஒரு சில நியாயங்கள் இருக்கிறது. காமன்வெல்த் கேம்ஸ் போட்டிக்கான வேலைகளில் என்னால் அதைக் கடைப்பிடிக்க முடியாது.' காமன்வெல்த் கேம்ஸ் போட்டியில் நடந்த நிர்வாகச் சீர் கேட்டுக்கும் ஊழல் களுக்கும் கபில் தேவின் பதிலே சாட்சியாக அமைகிறது.



காமன்வெல்த் போட்டி அக்டோபர் மூன்றாம் தேதி முதல் ஆரம்பம். ஆனால், இன்னமும் கூப்பாடு ஓயவில்லை. இந்தப் போட்டியை முன் வைத்து இந்தியா செய்த அக்கிரமங்களை எண்ணி உலக நாடுகள் எள்ளி நகையாடுகின்றன. 2003ல் இந்தியாவுக்கு காமன் வெல்த் போட்டி ஒதுக்கப்பட்டது. ஸ்டேடியங்கள் மற்றும் இதர வசதிகள் ஏற்படுத்திக் கொடுக்க ஏழுவருடங்கள் தாராளம். (சென்னையில் மிகக் குறுகிய காலத்தில் தெற்காசிய விளையாட்டுப் போட்டிக்கான ஏற்பாடுகள் நடந்தன.) ஆனால், போட்டி ஆரம்பமாகும் நாள் வரை வேலை நடந்து கொண்டிருக்கிறது என்றால் மேல்மட்டத்திலிருந்து நிர்வாகம் சரியில்லை என்றுதான் அர்த்தம். எந்த ஒரு வேலையும் சரியாக நடக்கவில்லை என்று ஒரு வருடத்துக்கு முன்பே தில்லி முதல்வருக்கும் சுரேஷ் கல்மாடிக்கும் எச்சரிக்கை விடுக்கப்பட்டது. ஆனாலும் இறுதிவரை களேபரங்கள் ஓயவில்லை. இப்போது காமன்வெல்த் ஃபெடரேஷனின் தலைமை நிர்வாகி மைக் ஹூப்பர் எல்லாக் குற்றச் சாட்டுகளுக்கும் இந்தியா தான் காரணம் என்கிறார் வெளிப்படையாக. 'நான் அங்கே போய் வேலை செய்ய முடியாது. இந்தியாவிடம் பொறுப்பை ஒப்படைத்து விட்டால் அவர்கள்தான் எல்லாவற்றுக்கும் பொறுப்பு. ஒவ்வொரு வேலைக்கும் நிறைய சாக்குப் போக்குகளைச் சொன்னார்கள். வேலை முடிய கெடு கொடுத்தால் அதை உதாசீனப்படுத்திவிட்டார்கள்' என்று இந்தியா மீது எவ்வித மரியாதையும் இல்லாமல்



# தேவையா

பேட்டி கொடுக்க ஆரம்பித்து விட்டார். போட்டி முடிந்தபிறகு இன்னும் பல உண்மைகள் வெளி வரலாம்.

இதுவரை ஆன செலவுகளைப் பார்த்து எல்லோரும் வாயடைத்துப் போனால், 'வெரி ஸாரி. எஸ்டி மேட்டில் வரிகளைச் சேர்க்க வில்லை. செலவில் மேலும் 720 கோடியைச் சேர்த்துக்கொள்ளுங் கள்' என்று இப்போது ஒரு கோரிக்கை வந்திருக்கிறது. இப்படி எங்கு தொட்டாலும் ஊழலும் நிர்வாகச் சீர்கேடுகளும் தில்லி அரசின் மானத்தை வாங்கிவிட்டது.


❋ ஷீலா


❋ கபில்

ஒரு இலட்சம் அடித்தட்டு மக்கள் தில்லியிலிருந்து அப்புறப்படுத்தப் பட்டார்கள். பீஹார், உத்தரப் பிரதேசத்துக்குப் பிச்சைக்காரர்கள் விரட்டப்பட்டார்கள். இதைக் கண்டித்த நீதிமன்றம், ஷீலா தீட் சித்திடம் கேட்ட கேள்வி 'போட்டிக்காக இந்தியாவுக்கு வரும் வெளிநாட்டினரிடம் இங்கு ஏழைகளே இல்லை என்கிற தோற் றத்தை உருவாக்கப் போகிறீர் களா?' 'போட்டி முடிந்தபிறகு 30 இலட்சம் பேர் வீடில்லாமல் இருப் பார்கள். அவர்களுக்கான ஏற்பாடு களைப் பிறகு செய்யவேண்டும்' என்று சமீபத்தில் ஷீலா தீட்சித் கூறியிருக்கிறார். கட்டு மான வேலைகள் நடந்த போது நூற்றுக்கும் மேற் பட்ட தொழிலாளர்கள் விபத்து அல்லது நோயின் காரணமாக மரணமடைந் திருக்கிறார்கள்.

இதுவரை பாது காப்பு, சுகாதார மின்மை போன்ற காரணங்களை முன் வைத்து ஏராளமான வீரர்கள் போட்டியி லிருந்து விலகி விட்டார் கள். இந்தியா என்றால் கேவலமான நாடு என்கிற அபிப்ராயத்தை இந்தப் போட்டி ஏற்படுத்திவிட் டது. இதனால் உலகப் போட்டிகளை நடத்த லாயக்கு இல்லாத நாடாகிவிட்டது இந்தியா. இனி இந்தி யாவுக்கு எந்த ஒரு சர்வதேச விளையாட்டுப் போட்டியை நடத்தவும் வாய்ப்பு கிடைக் காது. நிச்சயம் அடுத்த நூறு ஆண்டுகளுக்கு ஒலிம்பிக் போட்டியை இந்த மண்ணில் நடத்த முடியாது.

ச.ந. கண்ணன்



# இந்த அவமானம்!

ஆனாலும் தில்லி அரசு மனம் தளரவில்லை. பிரச்னைகளை மறைக்க வேறு சில வேலை களைச் செய்யத் துணிந்தது.

தில்லியைச் சிங்காரமாகக் காட்ட ஷீலா தீட்சித் மிகவும் பாடுபட்டார். ஏழைகளின் வீடுகளுக்கு மூங்கில் திரை போடப்பட்டது.



'கலையே என் வாழ்க்கையில்' என்ற பாகேஸ்வரி இராகத்தில் அமைந்த இனிமையான பாடல் 'மீண்ட சொர்க்கம்' என்ற திரைப்படத்தில் இடம்பெறுகிறது. இயக்குநர் ஸ்ரீதரின் கற்பனையில் வின்சென்ட்டின் அற்புதமான கேமரா கோணங்களில் எடுக்கப்பட்ட இந்தப் பாடல் காட்சி, இன்னமும் என் உள்ளத்தில் பசுமையாகக் குடிகொண்டு உள்ளது. காதல் மன்னன் ஜெமினி கணேசனுக்காகவும் நாட்டியப் பேரொளி பத்மினிக்காகவும் ஏ.எம்.ராஜாவும் பி.சுசிலாவும் மிகவும் இனிமையாகப் பாடி உள்ளனர். பத்மினி அழகாக நாட்டியம் ஆடிக்கொண்டும் ஜெமினி ரசித்துப் பாடிக்கொண்டும் வருவது மிகவும் நேர்த்தியாக அமைந்துள்ளது உச்சக் கட்டம்.

– பு. ஸ்ரீதர்,
நங்கநல்லூர்.

அன்றும், இன்றும், என்றும் ரசித்து மகிழ வேண்டிய அற்புதமான 'தத்துவப்'பாடல் 'கடவுள் இருக்கின்றான்.' எழுதியவர் கண்ணதாசன். டி.எம்.எஸ். பாடும்போது இருக்கின்றார் என்று பாடி பாடலை உயிர்ப்பித்திருக்கிறார். அந்தப் 'பழைய கூட்டணி' மீண்டும் உயிர்பெற்று வந்து உலகை கூட்டாதோ என்ற ஏக்கம் எனக்குண்டு.

– கு.ப.இரகுநாதன்,
பூவிருந்தவல்லி.



# சிட்டுக்குருவி முத்தம் கொடுத்து...





'அதோ அந்தப் பறவைபோல வாழவேண்டும், இதோ இந்த அலைகள்போல ஆடவேண்டும்' பாடல் அடிமை வாழ்வினை விட்டொழிந்து சுதந்திர தாகத்தை நுகரத் துடிக்கும் மனிதர்களிடம் மனவெழுச்சியை உண்டாக்கும் பாடல் இது! சுதந்திர வேட்கையின் துடிப்பையும் பெருமையையும் அழகுபடவும் உணர்ச்சிப் பெருக்கோடும் இந்தப் பாடலைவிட அழகாகச் சொல்லமுடியாது.

– கா.இர.குப்புதாசு, செஞ்சி.

# எனக்குப் பிடித்த பாடல்

வாசகர்களே!
உங்களுக்குப் பிடித்தமான பாடல் என்னவென்று...
10 வரி கமெண்ட்டுடன் எங்களுக்கு எழுதி அனுப்புங்க...
kalki@kalkiweekly -க்கும் அனுப்பலாம்.

இடம்பெறும் ஒவ்வொரு அனுபவத்துக்கும் ரூ.50 சன்மானம் உண்டு!

'சிட்டுக்குருவி முத்தம் கொடுத்து...' பாடல் நாகரிகத்தின் உச்சம்! காதலன் (காட்சி: Camera angle standard -ஆக வைக்கப்பட்டு இருக்க) கீழே இருக்கும் காதலியை நோக்கி முத்தமிடக் குனிகிறான்! ஆனால், காதலன் முத்தமிடும் காட்சி பார்வையாளரின் கண்களுக்குத் தெரியாது. சில நொடிகளில் மீண்டும் காதலன் எழுகிறான். இப்போது, காட்சி பார்வையாளரின் விழிகளில்! 'சிவாஜி' அவர்கள் தன் உதடுகளை நாவால் நீவுவார் பாருங்கள்... அடடா, முத்தக் காட்சியை எவ்வளவு நாகரிகமாக அந்த இடத்தில் சொல்லி இருப்பார்கள் தெரியுமா? இந்த நாகரிகத்துக்காகவே என்னால் மறக்க முடியாத பாடலாக இது அமைந்துபோனது!



- ஹேமா, சென்னை.

துளசி

நானா பட்டேகர் வீட்டில் விநாயகர் சதுர்த்தி பூஜைகளுக்கு எப்போதும் விசேஷம் உண்டு. இந்த ஆண்டின் சூப்பர் விசிட்டர், பால் தாக்கரே! நான்கு மாதங்களுக்குப் பிறகு தாக்கரே வீட்டை விட்டு வெளியே வந்திருக்கிறார்!

# ஜண்டுபாம் அம்பாஸிடர்!

டபங்க் இந்திப் படத்தின் ஒரு பாடலில், ஜண்டு பாம் வந்துவிட, அந்த நிறுவனம் கோர்ட்டுக்குப் போவேன் என்றது. சமரசம் பேசி, மலய்க்கா அரோராவை ஜண்டு பாமின் அம்பாசிடராகவும் ஆக்கிவிட்டார்கள்! ஜண்டு பாமுக்கு ஒரே வாழ்வுதான்!



ஷப்னா ஆஸ்மியின் 60வது பிறந்த நாளுக்கு அவரது கணவர் ஜாவேத் அக்தர் ஒரு கேக் ஆர்டர் செய்தார். மும்பை குடிசைப் பகுதிகளைப் போன்ற வடிவமைப்பில் கேக். இப்போது ஊரெல்லாம் ஒரே திட்டு! கேக்கில் குண்டு வைப்பது இதுதானோ?



# நியூஸ் மிக்சர்

ஹாலிவுட் மனிதநேய விருது இவ்வாண்டு ஹாலிவுட் சூப்பர் ஸ்டார் சீன் பென்னுக்கு வழங்கப்படுகிறது. ஹெய்தி நில நடுக்கத்தில் ஏற்பட்ட மோசமான அழிவுகளுக்குத் தம்மாலான உதவிகளைச் செய்து வருவதற்காக இவ்விருது.



லாக்மே ஃபேஷன் வீக்கில் நீட்டா லுல்லா வடிவமைத்த நீண்ட அங்கியை அணிந்து பூனை நடை நடந்தார், நம்ம ஊர் ஸ்ரீதேவி. இரண்டு மூன்று முறை துணி, காலில் சிக்கிக் கொள்ள லேசான தடுமாற்றம்! வயசானால், பூனை நடை வராதோ?



மகேஷ் பூபதி, லாரா தத்தா அரசல் புரசல் காதல் இப்போது அம்பலத்துக்கு வந்துவிட்டது. நியூயார்க்கில் கேண்டில் லைட் டின்னரில் தன் காதலைச் சொன்னாராம் பூபதி. கிளாமருக்கு இன்னும் கிளாமர் கூடிப்போச்சு!



திராத விளையாட்டு விட்டலன்




# விட்டலா...

**சா**ங்கதேவர் தம்மைக் காண வருகிறார் என்கிற செய்தி இதற்குள் ஞானேஸ்வரருக்குக் கிடைத்துவிட்டிருந்தது. ஆயிரம் வருடங்களுக்கு மேல் வாழ்ந்துகொண்டிருக்கும் ஒரு சித்த புருஷர் தம்மைப் பார்க்க வருகிறார் என்று கேள்விப்பட்டதும், தானே கிளம்பிச் சென்று அவரைச் சந்திப்பதுதான் முறை என்று தீர்மானித்தார் ஞானேஸ்வரர்.

அப்போது ஆலந்தியில் இருந்த ஒரு சுவரின் மீது உட்கார்ந்தபடி ஞானேஸ்வரரும் அவரது இரண்டு சகோதரர்கள் மற்றும் சகோதரியும் பேசிக்கொண்டிருந்தனர். சாங்கதேவரைச் சென்று சந்திக்கவேண்டும் என்ற எண்ணம் தீர்மானமாக ஞானேஸ்வரருக்குள் எழுந்த அடுத்த கணமே அந்த மாபெரும் அதிசயம் நிகழ்ந்தது. அவர் உட்கார்ந்து கொண்டிருந்த சுவர் மேலே எழுந்தது. வானில் பறந்தது. சாங்கதேவர் வந்துகொண்டிருந்த இடத்தை நோக்கிச் சென்றது. இதைக் கண்ட மக்களெல்லாம் பிரமித்து நின்றனர்.

புலி வாகனம், கழுத்தில் கருநாகம் என்று வந்துகொண்டிருந்த சாங்கதேவர், தன்னைச் சுற்றிலும் சிதறி ஓடிக்கொண்டிருந்த மக்கள் திடீரென்று நிற்பதையும் அவர்கள் கண்கள் வானத்தைப் பார்த்து விரிவதையும் கண்டு தானும் அந்த இடத்தில் தன் பார்வையைச் செலுத்தினார்.

சுவரில் அமர்ந்தபடி பறந்து வந்துகொண்டிருந்த ஞானேஸ்வரரைப் பார்த்ததும் சாங்கதேவரின் கர்வம் தவிடுபொடியானது.

'நாமாவது ஒரு காலத்தில் உயிருடன் இருந்த பிணங்களை ஒரிரு நிமிடங்களுக்கு மட்டுமே உயிர்ப்பிக்கிறோம். உயிருள்ள புலியையும் நாகத்தையும் அடக்கி நம்முடன் கொண்டுவந்திருக்கிறோம். ஆனால், ஞானேஸ்வரரால் உயிரில்லாத சுவரையே எழும்பிப் பறக்க வைக்க முடிந்திருக்கிறதே!' ஆக சித்துவிளையாட்டுகளை விட, முழுமையான இறையருள் மிக முக்கியம் என்பதையும் அது ஞானேஸ்வரருக்குப் பூரணமாகக் கிடைத்துள்ளது என்பதையும் சாங்கதேவர் உணர்ந்துகொண்டார்.

ஞானேஸ்வரரின் முன் பணிந்தார். "என் செருக்கு அழிந்தது. என்னை உங்கள் சீடனாக ஏற்றுக்கொள்ளுங்கள்" என்றார்.

தன் இரு கரங்களாலும் அவரை எழுப்பிய ஞானேஸ்வரர் அருகிலிருந்த ஆலமரத்தை நோக்கி நடத்திச் சென்றார். ஆலமரத்தின் கீழ் அமர்ந்து கொண்டார். அவருக்குக் கீழே உட்கார்ந்தார் சாங்கதேவர். உபதேசம் ஆரம்பமானது. ஞானம், அதை அடையும் முறை, மாயம், அதன் தன்மை, அதை அகற்றும் முறை, பிரம்மம், அதன் உண்மை, அந்த உண்மையை அறிவதனால் ஏற்படும் பேரானந்தம் என்று ஒவ்வொன்றாக உபதேசங்கள் தொடங்கின, தொடர்ந்தன. சாங்கதேவர் தெளிவு பெற்றார். அவரது அகந்தை முற்றிலுமாக அகன்றது.

ராமநாதன் இப்படிக் கூறியதும் எனக்குச் சுடர் விடும் இளமையோடு சிவபெருமான் தட்சிணா மூர்த்தியாக ஆலமரத்தடியில் இருந்து உபதேசம் செய்ததும், பழுத்த முதியவர்களான சனகாதி முனிவர்கள் அவரது சீடர்களாக அந்த அறிவுரைகளைச் செவிமடுத்ததும் நினைவுக்கு வந்தது. கூடவே சுவாமிமலையில் தந்தைக்கு உபதேசம் செய்த தனயனான சுவாமிநாதனும் தோன்றினான்.

"ஒரே ஒரு வேண்டுகோள். நீங்கள் சொல்லப்போகும் அற்புத சம்பவத்தை என் மனம் சிறிதும் அலைபாயாமல் முழுக் கவனத்


✽ நாமதேவர்

# சீக்கிரம் வா..!

"எத்தனைதான் சிறப்பானவர்களாக இருந்தாலும் கர்வம் ஏற்பட்டால் பாண்டுரங்கனின் பக்தர்களிடம் பணிந்துதான் ஆகவேண்டும் இல்லையா?" என்று கேட்டான் ஜருகண்டி.

ராமநாதனின் முகத்தில் லேசான ஒரு புன்னகை எட்டிப்பார்த்தது. "சில சமயம் பாண்டுரங்க பக்தர்களுக்குக் கூட லேசான கர்வம் தலைதூக்கியதுண்டு. அதை விட்டலன் மென்மையாக அடக்கியதும் உண்டு. ஜருகண்டி, நான் சொல்லவேண்டும் என்று நீ கொஞ்ச நாட்களாகவே நச்சரித்துக்கொண்டிருக்கும் சம்பவத்தை இப்போது சொல்கிறேன் கேள்" என்று தொடங்கினார் ராமநாதன்.

தோடு கேட்க ஆசை. அதற்காக..." என்று தயக்கத்துடன் நிறுத்தினான் ஜருகண்டி.

அவன் பார்வை பதிந்த இடத்தைக் கொண்டே ராமநாதனுக்கும் எனக்கும் ஜருகண்டி என்ன சொல்ல வருகிறான் என்பது தெரிந்துவிட்டது. என்றாலும் வேண்டுமென்றே "என்ன சொல்ல வருகிறாய்? கொஞ்ச நேரம் தியானம் செய்கிறேன் என்கிறாயா?"

அருண் சரண்யா

என்றார் ராமநாதன்.

அவசர அவசரமாகப் பதிலளித்தான் ஜருகண்டி. "அதில்லை. இந்த ஜிலேபிகளைச் சாப்பிட்டு விட்டால் கவனம் சிதறாமல் நீங்கள் சொல்வதைக் கேட்கலாமே என்று தோன்றியது" என்றான்.

ராமநாதன் தலை, இடவலமாக அசைந்து விடுமோ என்ற கவலையோடு அவன் பார்க்க, நல்லவேளையாக அது மேல் கீழாக அசைந்தது.

சற்று நேரத்தில் ஜருகண்டி 'அலைபாயாத மனத்தோடு' ராமநாதன் கூறியதைக் கேட்கத் தயாரானான்.



கோராகும்பரை நாம் அறிவோம். தொழிலால் குயவர். மண்ணை இரு கால்களாலும் மிதித்தபடி விட்டல பஜனையை அவர் வழக்கம் போல் செய்ததும், தம்மை நோக்கித் தன் குழந்தை வருவதைக்கூட அறியாமல் பஜனையில் மூழ்கி, தம் கால்களால் குழந்தையைக் கோராகும்பர் சிதைத்ததும், பின்னர் பாண்டுரங்கனின் அருளால் அந்தக் குழந்தை உயிர்பெற்று வந்ததும் நாம் அறிந்தவைதான்.

அந்த நிகழ்ச்சிக்குப் பின்னர் கோராகும்பர், நாமதேவர் ஆகியோர் ஞானேஸ்வரரின் வீட்டில் கூடுவதும், விட்டலனின் புகழ் பாடுவதும் அடிக்கடி நடக்கத் தொடங்கின.

ஒரு முறை சிறுமி முக்தாபாய், கோராகும்பரைப் பார்த்து ஒரு கேள்வி கேட்டாள்: "நீங்கள் பானை செய்கிறீர்கள். அதற்கு எதற்காக ஒரு சின்னக் கழியை வைத்திருக்கிறீர்கள்?"

கோராகும்பர் அந்தக் கழியை எடுத்துக் காண்பித்தார். "இந்தக் கழியை வைத்துக் கொண்டுதான் பானை வெந்திருக்கிறதா இல்லையா என்று பார்ப்பேன்" என்றார். அப்போது ஞானேஸ்வரர், "நமது தலையும் பானையைப் போலத்தான். அதற்கு உள்ளே இருக்கும் மூளை வெந்திருந்தால் நல்லது" என்றார் தத்துவார்த்தமாக. வெந்திருப்பது என்று அவர் குறிப்பிட்டது, பக்குவப்பட்டது என்கிற பொருளில்.


● சாங்க மஹாதேவ் மந்திர்

முக்தாபாய் உடனே கோராகும்பரைப் பார்த்து, "நீங்கள் இங்கே இருக்கும் ஒவ்வொருவரின் தலையையும் உங்கள் கழியால் தட்டிப்பார்த்து எது வெந்திருக்கிறது, எது வேகவில்லை என்பதைச் சொல்லுங்கள்" என்றாள் குறும்புடன்.

"நான் தயார்" என்றார் ஞானேஸ்வரர். அவரது சகோதரர்களும் ஒத்துக்கொண்டனர்.

கோராகும்பர் தனது கழியால் ஞானேஸ்வரரின் தலையில் லேசாகத் தட்டினார். டங் என்ற ஒலி வந்தது. "இந்தப் பானை வெந்திருக்கிறது" என்று தீர்ப்பளித்தார் முக்தாபாய்.

அடுத்ததாக நாமதேவரின் தலைக்கருகே கோராகும்பர் தன் கழியை எடுத்துச்செல்ல, அவர் சட்டென தன் தலையை நகர்த்தி ஒதுங்கிக் கொண்டார்.

''ஐய, இந்தப் பானை வேகவே இல்லை'' என்று கூறிச் சிரித்தாள் முக்தா பாய். கூட இருந்த மற்றவர்களும் வாய் விட்டுச் சிரிக்க, நாமதேவருக்குக் கோபம் எழுந்தது. இதை ஒரு கௌரவப் பிரச்னையாக எடுத்துக் கொண்டார்.

''இங்கு இருக்கும் எல்லோரையும் விட எனக்கு அதிக பக்குவம் உண்டு. இதற்குச் சாட்சியாக விட்டலனே இங்கு வருவான். உங்களுக்கு எடுத்துச் சொல்வான்'' என்றார் பெருமையாக.



தமது பக்த மகான்களோடு விட்டலன் விளையாடுவதும், உணவு அருந்துவதும் சகஜமாக இருந்து வந்தது. எனவே அப்போதும் விட்டலன் வருவான் என்பதை அனைவரும் எதிர்பார்த்தனர். ஆனால் விட்டலன் வரவில்லை.

அத்தனைபேர் நடுவில் எத்தனை அவமானம்! நாமதேவர் வாய் விட்டுக் கதறினார். ''விட்டலா, சீக்கிரம் வா.''

விட்டலனோ மெதுவாகக் கூட வரவில்லை.

தாங்கமுடியாத சோகத்துடன் பண்டரிபுரத்தை அடைந்தார் நாமதேவர். ''என்னைக் கைவிட்டுவிட்டாயே'' என்று முறையிட்டார். விட்டலன் காட்சி தந்தான். ''நாமதேவா, நீ இன்னும் முழு பக்குவம் அடையவில்லை. உரிய குருநாதரைத் தேர்ந்தெடுத்துக் கொள். அவரிடம் இருந்து உபதேசம் பெறு. அப்போதுதான் முழு பக்குவ நிலையை அடைவாய்'' என்றார்.

''அதன்படியே செயல்பட்ட நாமதேவர், குருவைத் தேடிச்சென்ற படலம்தான் நமக்கு ஏற்கெனவே தெரியுமே'' என்று கூறிய ராமநாதன், வேறொரு ஆச்சர்யமான தகவலையும் தெரிவித்தார்.

''விட்டலனின் ஆலோசனையின்படி தேடிச் சென்று யாரை குருவாக நாமதேவர் அடைந்தாரோ, அந்த குருவான விசோபா என்பவர் சாங்கதேவரின் சீடர்'' என்றார்.

''ஆனால் சாங்கதேவர், ஞானேஸ்வரரைத் தன் குருவாக ஏற்றுக் கொண்டார் என்று சொன்னீர்களே. அப்படியானால் ஞானேஸ்வரரின் சீடரின் சீடர்தான் நாமதேவர்'' என்று வியப்புடன் கூறினான் ஜருகண்டி.

## அபங்க-அமுதம்

*கா ரே புண்ட்யா மாதலாஸி*
*உபே கேலே விட்டலாஸி*
*ஐஸா கைஸா ரே தாதீட*
*மாகே பிரகாவலி விட*
*யுகே ஜாலீ அட்டாவீஸ*
*அஜுனிந ம்ஹணஸீ பைஸ*
*பாவ தேகோனி நிகட*
*தேவே ஸோடிலே வைகுண்ட*
*துகா ம்ஹணே புண்டலிகா*
*தூசி பளியா ஏக நிகா*

- துகாராம்

''ஏ புண்டலீகா, உனக்கு என்ன ஒரு பெருமிதம்! நீ எப்படி இவ்வளவு தைரியமாகச் செங்கல்லை எறிந்து அதில் விட்டலனை நிற்க வைக்கலாம்? இருபத்தெட்டு யுகங்கள் கடந்துவிட்டன. இன்றுவரை விட்டலனை நீ உட்காரக் கூடச் சொல்லவில்லை. உன் தாய் தந்தை பக்தியைக் கண்டு பகவான் வைகுண்டத்தைவிட்டு உன்னருகே வந்துவிட்டான். புண்டலீகா, நீ சாமர்த்தியமானவன்தான்!''








# பழைய வண்டியை ஓட்டி வாங்கணும்!

பெரும்பாலான மக்களுக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது. இரு சக்கர வாகன டீலர்கள் பழைய வண்டியை ஒரு மதிப்பு போட்டு எடுத்துக்கொண்டு புது வண்டியை, அந்த மதிப்பைக் கழித்துக் கொடுக்கிறார்கள் அல்லவா! பழைய வண்டியை வாங்கி என்ன செய்கிறார்கள்? ''அதைக் கம்பெனிக்கு அனுப்பி மீண்டும் புதுசு போல் மெருகேற்றி, பொதுமக்களுக்கே தள்ளி விடுவார்கள்''- இதுதான் நிறைய பேரின் கருத்து அல்லது சந்தேகம்.

''அப்படியில்லை; அந்த டீலர்கள் வாங்கும் பழைய வண்டிகளை நாங்கள் வாங்கிக்கொள்வோம். ஏதாவது சின்னச் சின்ன ரிப்பேர் இருந்தால் அதைச் சரி செய்து கொஞ்சம் இலாபம் வைத்து விற்று விடுவோம்'' என்கிறார் எம். கணேஷ்.

சென்னை அசோக்நகர் பகுதியில் கடந்த 15 வருடங்களாகப் பழைய இரு சக்கர வாகன வியாபாரம் செய்து வருகிறார் இவர். தினசரி இரண்டு அல்லது மூன்று வண்டிகள் விற்கிறார். டீலர்களிடம் மட்டுமல்ல; நிதி நிறுவனங்களிடம் கடன் வாங்கி வண்டி வாங்கி அதைக் கட்ட முடியாமல் போகிறவர்களிடம் வண்டியை நிதி நிறுவனம் கைப்பற்றிவிடும். அப்படிக் கைப்பற்றிய வண்டிகளையும் இவரைப் போன்ற விற்பனையாளர்கள் வாங்கி விற்கிறார்கள்.

பழைய வண்டி விற்பனை என்பது சென்னையில்









✱ கணேஷ்

ஒரு சுறுசுறு பிஸினஸ். மாதம் சென்னையில் மூவாயிரம் முதல் நான்காயிரம் பழைய இரு சக்கர வாகனங்கள் விற்கப்படுகின்றன.

"இந்தப் பழைய வண்டிகளை வாங்குபவர்கள் பெரும்பாலும் நடுத்தர மக்களே" என்கிறார் கணேஷ். "புதுசா வண்டி வாங்கி ஒரு வருடம் இரண்டு வருடம் ஓட்டிவிட்டு விற்கலாம் என்றால் கிட்டத்தட்ட வாங்கிய விலையில் 40 சதம் குறைத்துதான் போகும். மேலும் இப்போது இளைஞர்களின் கண்ணோட்டம் மாறியிருக்கிறது. விதவிதமான வண்டிகளை ஓட்டிப் பார்க்க விரும்புகிறார்கள். எனவே, மாற்றிக்கொண்டே இருக்கிறார்கள். ஹீரோ ஹோண்டா டீலரிடம் அந்த வண்டி மட்டும் தான் இருக்கும். ஒவ்வொரு வண்டிகளையும் பார்த்து விருப்பத் தேர்வு செய்து கொள்ள லாம். பல சமயங்களில் ஒன்றிரண்டு வருடங்கள் ஓடிய வண்டிகள் விலைக்கு வரும்" என்கிறார் கணேஷ். அதிகப் பழசான வண்டிகள் ஐந்தாயிரம் ரூபாய்க்கும் கிடைக்கும்.

ஹீரோ ஹோண்டா புதுசு கிட்டத்தட்ட ஐம்பதாயிரத்தைத் தொட்டு விடும். ஆனால் இரண்டு வருடமே ஆன வண்டியை இழுத்துப் பிடித்து முப்பதாயிரத்துக்குள் முடித்து விடலாம். இளைஞர்களைப் பொறுத்தவரை ஸ்ப்ளெண்டர் ப்ளஸ், பல்ஸர், யமஹா என்று விரும்பி வாங்குகிறார்கள். பெண்கள் டி.வி.எஸ், பெப்ட், ஆக்டீலா, ஸ்கூட்டி, கைனடிக் ஹோண்டா ஆகியவை அவர்களது சாய்ஸ். இருபதாயிரம் இருந்தால் பழைய வண்டி மார்க்கெட்டில் அட்டகாசமான வண்டியை வாங்கிவிடலாம். மொபெட்களுக்கு மறு விற்பனை பெரிய அளவில் கிடையாது.

பழைய வண்டி வாங்குவோருக்கு சில டிப்ஸ்: ✱ ஒரிஜினல் ஆர்.சி.புத்தகம், ஆயுள் வரி, ஆயுள் காப்பீடு, நிதி நிறுவனக் கடன் இருந்தால் - அந்த அடமானம் மீட்கப்பட்டதற்கான கடிதம். இவை முக்கியமாக இருக்க வேண்டும். ✱ வண்டியை நீங்கள் வாங்கிய பிறகு விற்ற பார்ட்டியிடம் ஃபார்ம் 29, 30-ல் கையெழுத்துப் போட்டு வாங்க வேண்டும். அப்போதுதான் ஆர்.டி.ஓ.வில் உங்கள் பேருக்கு வண்டியை மாற்ற முடியும். ✱ தெரிந்த மெக்கானிக்கைக் கூட்டிக் கொண்டு போகவும். அவர் செக் செய்து முடித்தபின் ஓட்டிப் பார்த்து வாங்கவும். (விற்பவரிடம் மெக்கானிக் கமிஷன் வாங்குவதைத் தவிர்க்க முடியாது.) ✱ ஆர்.சி. புத்தகத்தில் உள்ள சேஸிஸ் நம்பரும் இன்ஜின் நம்பரும் வண்டியில் இருக்கிறதா என்பதை செக் செய்யவும்.

"மார்க்கெட்டில் நிறைய திருட்டு வண்டிகளும் விற்பனைக்கு வரும். எனவேதான் தனி நபர்கள் எங்களிடம் வண்டியை விற்க வந்தால் ரொம்ப கவனமாக ஆர்.சி. புத்தகத்தை சோதனை செய்த பிறகே வாங்குவோம். போலி ஆர்.சி. புத்தகத்தை மிகச் சுலபமாகக் கண்டுபிடித்து விடுவோம். எங்களிடம் வாங்கும் வண்டிகளுக்கு டாக்குமெண்ட்ஸ் பக்காவாக இருக்கும். ஒரு வருடம் கியாரண்டி உண்டு. கேஷ் பில் கொடுப்போம்" என்கிறார் கணேஷ். - ஸ்ரீநி



# புருவங்களுக்கு மத்தியில் அழுத்தம் கொடு!

**விஜயம்பாள், கிருஷ்ணகிரி**

முப்பத்தொரு வயது நிரம்பிய என் மகன் இரவில் தூங்க முடியாமல் மிகவும் அவதிப்படுகிறான். அவனுக்கு நிம்மதியான தூக்கம் கிடைக்க என்ன செய்ய வேண்டும்?

**அக்குப்பிரெஷர் ஸ்பெஷலிஸ்ட் ஜெயலக்ஷ்மி:**

நமது உடல் ஆரோக்கியத்துக்கும் மன ஆரோக்கியத்துக்கும் நிம்மதியான இரவுத் தூக்கம் மிகவும் அவசியம். இரண்டு புருவங்களுக்கு நடுவில் விரலால் அழுத்திக் கொடுத்துக் கொண்டிருந்தால் சில நொடிகளில் தூக்கம் கண்களைத் தழுவிவிடும். அதைப் போலவே, விரல் நுனிகளை ஒன்றிரண்டு நொடிகள் தொடர்ந்து மேலும், கீழும், பக்க வாட்டிலும் அழுத்திக் கொண்டே இருந்தாலும் தூக்கம் வரும். இரு காதுகளிலிருந்து செல்லும் கோடுகள் சந்திக்கும் ஒரு புள்ளி உச்சந்தலையில் இருக்கிறது. சரியாக அதில் அழுத்தம் கொடுத்துக் கொண்டு இருந்தாலும் சுகமான தூக்கம் வந்துவிடும். தூங்குவதற்கு ஒன்றிரண்டு மணி நேரங்களுக்கு முன்பாக

உங்கள் சந்தேகங்களை 'கல்கி கிளினிக்' என்று குறிப்பிட்
kacli என்று டைப் செய்து ஒரு ஸ்பேஸ் விட்டு, உங்கள் கேள்



● ஜெயலக்ஷ்மி

உண்பது, சீரியலான விஷயங்களைப் பேசாமல், சிந்திக்காமல், படிக்காமல் மனத்தை அமைதியாக வைத்துக் கொள்வது எனப் பழக்கப்படுத்திக் கொண்டால் தூக்கத்துக்கு எந்தவிதத் தடையும் வராது.

செல்வராஜ், நெய்வேலி

*தனுராசனம் செய்தால் ஹெர்னியா (குடல் இறக்கம்) வரும் என்கிறார்களே... உண்மையா?*

அக்குபிரெஷர் ஸ்பெஷலிஸ்ட் ஜெயலக்ஷ்மி:

தனுராசனம் செய்வதால் ஒருபோதும் ஹெர்னியா (சதை பிதுக்கம்) வந்துவிடாது. ஆனால், ஹெர்னியா தொந்தரவு இருப்பவர்கள், வளைந்து செய்யும் தனுராசனத்தைத் தவிர்த்தல் நலம்.

விஜயலக்ஷ்மி, சென்னை

*அறுபத்தொரு வயது நிரம்பிய எனக்குக் கீழ் வரிசைப் பற்கள் தேய்ந்துகொண்டே வருகின்றன. இதைத் தவிர்க்க உணவுவகைகளில் எதை உட்கொள்ள வேண்டும், எதைத் தவிர்க்க வேண்டும்? கால்சியம் மாத்திரைகளைச் சாப்பிட்டு வந்த நான் குதிகால்களில் வலி ஏற்பட்டதால், அதை நிறுத்திவிட்டேன். பாலும் சாப்பிடுவதில்லை. அதனாலும், பற்களுக்குப் பாதிப்பு இருக்குமா?*

பல் மருத்துவர் ரேகா ஹரிஹரன்:

மனிதனுக்கு வயது ஏற ஏற பற்களுக்கும் வயதாகித் தேய்மானம் ஏற்படுவது இயற்கையே. சின்ன வயது முதலே சரியான முறைப்படி பல் துலக்குவது ரொம்ப அவசியம். மிதமான வளைந்துகொடுக்கும் தன்மை கொண்ட பிரஷ்களை உபயோகிப்பதுதான் பற்களுக்குப் பாதுகாப்பு. அதேபோல, பற்களின் ஒருபுறம் மட்டுமே அழுத்தம் கொடுக்கக் கூடாது. பல் மருத்துவரிடம் சென்று, சரியான முறைப்படி பல் துலக்கக் கற்றுக் கொள்வது பல் தேய்மானத்தைத் தள்ளிப் போட உதவும். அசைவ உணவு வகைகளைச் சாப்பிடுபவர்கள், கடினமான எலும்புத் துண்டுகளைக் கடிப்பதால் அவர்களது பற்கள் சீக்கிரத்திலேயே பலத்தை இழந்துவிடும் வாய்ப்பும் உள்ளது. அல்வா, சாக்லேட்களைத் தவிர்ப்பது, எந்த ஒரு உணவு பதார்த்தத்தையுமே ரொம்ப சூடாகவோ, அல்லது ரொம்ப குளிர்ச்சியாகவோ சாப்பிடாமல் இருப்பது பற்களின் ஆரோக்கியத்தை நீட்டிக்கும்.



● ரேகா ஹரிஹரன்

கால்சியம் மாத்திரைகளை உட்கொள்வது எலும்புகளுக்கு நல்லது. குறிப்பாக, பல்லைச் சுற்றி உள்ள எலும்பு வலுவாகும். குறிப்பாக பெண்களுக்கு 40, 45 வயதுக்கு மேல் மெனோபாஸ் தோன்ற ஆரம்பிக்கும். அப்போது arthritis, osteoporosis போன்ற குறைபாடுகளால் உடலில் கால்சியம் சத்துக் குறைவதால், ஏற்படும். இவற்றிலிருந்து தற்காத்துக் கொள்ள, ஒரு நாளைக்கு ஒரு கால்சியம் மாத்திரை எடுத்துக்கொள்வது நல்லது. பால் சாப்பிடுவதும் ரொம்ப அவசியம். கால்சியம் சத்துக் குறைந்தால் பற்கள் நிச்சயம் பாதிப்புதான் அடையும்.

...னுப்புங்க... kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்போனில்,
...பெயர், ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.

# டூ வீலருக்கும் ஜல்ப்பு பிடிக்கும்!

"எல்லோருக்குமே அவங்கவங்க டூவீலர் பளபளக்குற பகலா நீ... கணக்கா சுத்தமா, சூப்பரா பார்க்கறதுக்கே சும்மா மின்னல் மாதிரி மின்னணும்னு ஆசை இருக்கத்தான் செய்யும். அதுக்காக எப்பப்பாரு டூ வீலரை பண்ணீல போட்டுக் குளிப்பாட்டாத குறையா, தண்ணில குளிப்பாட்டிக்கிட்டே இருக்கக்கூடாது. அப்படிப் பண்ணிக்கிட்டே இருந்தீங்கன்னா, உங்க டூ வீலர்ல இருக்குற எலக்ட்ரானிக் பார்ட்ஸுக்கு ஜல்ப்பு புடிச்சுத் தகராறு செய்ய ஆரம்பிச்சுடும். அதனால, மாசத்துக்கு ஒரு தபா வண்டிய சர்வீஸ் உட்டுடுங்க. நாங்க பாத்து வாட்டர் வாஷ் செஞ்சுக் கொடுக்கறோம்'' என, பலமான பீடிகையோடு பேசுகிறார் டூ வீலர் மெக்கானிக் பாபு.

''வண்டிய உங்க கையால நீங்களே தான் க்ளீன் பண்ணணும்னு ஆசைப் பட்டீங்கன்னா... நல்லா க்ளீன் பண்ணிட்டு, ஒரு மணி நேரம் கழிச்சுத்தான் வண்டியை ஸ்டார்ட் செய்யணும்னு ஒரு பாலிசி வெச்சுக் குங்க. சரியா?

ஆயிரத்து ஐந்நூறு கிலோ மீட்டருக்கு வண்டி ஓடி முடிச்சதுமே ஆயில் மாத்தணும். வண்டியோட ஆயுள் நீடிக்கணும்னா இதைக் கண்டிப்பா செஞ்சே ஆகணும். வண்டில நல்ல மைலேஜ் மெயின்டேன் ஆகணும்னா, சும்மான்னாச்சும் ட்ராஃபிக் சிக்னல்ல நிக் கும்போது வண்டிய டர்புர்ன்னு சத்தம் போட வைக்கற வேலை எல்லாம் கூடவே கூடாது. அதனால, எப்பப்போ தேவையில்லையோ அப்பப்போ வண்டிய ஆஃப் பண்ணிடுங்க.

டூவீலர் ஒரு ஷோ பீஸ் அல்ல. சும்மா என் பப்பி கேட்டுச்சு வாங்கினேன். என் தம்பி கேட்டான் வாங்கினேன்னு சொல் லிக்கிட்டு சீன் போடற கதை எல்லாம் கூடவே கூடாது. ஒரு நாளைக்கு ரெண்டு கிலோமீட்டராவது வண்டி ஓடியே ஆக ணும்னு மனசுல வெச்சுக்குங்க. ஒரு வாரத்துக்கு மேல வண்டி ஓடாம ஒரே எடத்துல நிக்கறது, வண்டியின் (பேட்டரி) வாஸ்து சாஸ்திரப்படி சரியில்லை. புரி யுதா?

வாரத்துக்கு ஒரு தபா ஏர் செக்கிங் கண்டிப்பா பண்ணிக்கணும். சில்லரைக் காசு கொடுக்க சோம் பல் பட்டுக்கிட்டு உங்க வண்டிக்குக் காத்துக் காட்ட மறந்துடாதீங்க,


* பாபு

மைலேஜ்ஜுல வண்டி படுத்துடும்.

மழைக் காலம் வந்தா வண்டிய எக்ஸ்ட்ரா கேர்ஃபுல்லா பார்த்துக்கிடணும். மழைல உங்க வண்டிக்கு ஒரு போர்வை கொடுக்க மறக்காதீங்க. எவ்வளவு காஸ்ட்லி யான வண்டியா இருந்தாலும், அது மழைல நனைஞ்சா அவ்வளவுதான்.

இந்த டிப்ஸ் எல்லாம் நடைமுறைப் படுத்துனீங்கன்னா உங்க வண்டி சூப்பரா பரபரப்பா ஓடிக்கிட்டே இருக்கும். அப்படி ஏதாவது மக்கர் பண்ணின்னா இருக்கவே இருக்கோம் நாங்க. அதனால ஃப்ரியா ஜாலியா டூ வீலர்ல ஓட்டி ஒரு கலக்குக் கலக்குங்க'' என்கிறார் பாபு.

**- என்.எஸ்.கே.**



''உனக்கு என்ன தைரியம் இருந்தா, என் வீட்டுச் சுவர் ஏறி குதிச்சு உள்ளே வருவே?''

''சார்! நான் உங்களுக்கு மாமூல் கொடுக்க வந்தேன்.''

- வி. சாரதிடேச்ச

# "அய்யா... நான் மாமூ



''என் பெண்டாட்டிக்கு ஒரு 'பீ காம்ப்ளெக்ஸ்' மாத்திரையாவது எழுதிக் கொடுங்க டாக்டர்!''

''எதுக்கு?''

''என் அம்மாவுக்கு மட்டும் 'அரை டஜன்' வெரைட்டில மாத்திரை எழுதிக் கொடுத்திருக்கீங்களேன்னு, அவளுக்கு ஒரு 'காம்ப்ளெக்ஸ்'!''

- வெ. சீதாராமன்



''படம் வெளிவர்றதுக்கு முன்னாடியே திருட்டு வி.சி.டி. வந்துடுச்சி.''

''ஆச்சரியமா இருக்குதே...?''

''இது என்ன ஆச்சரியம். அந்தப் படம் இன்னும் ஷூட்டிங்கே முடியலை. அதான் ஆச்சரியம்.''

- வி.சாரதிடேச்சு

''தலைவரே... உங்க மகனை ஏன் அரசியலுக்குக் கொண்டு வரலை?''

''சூது வாது தெரியாத அப்பாவியா இருக்கான்.''

- என்.வி. ரமணி



# கொடுக்க வந்தேன்!"



''எங்க ஓட்டல் இட்லி மல்லிப்பூ மாதிரி இருக்குமே!''

''கொஞ்சம் வதங்கிப் போயிருக்குது. தண்ணி தெளிச்சி வெய்யுங்க!''

- வெ. சீதாராமன்



''சண்டைன்றதுக்கும் 'போர்'ன்றதுக்கும் என்னப்பா வித்தியாசம்?''

''உங்கம்மா என்கூட பேசறது சண்டை, 'சட்டு'ன்னு முடிஞ்சிடும். அதுவே அவ என் அம்மாகூட நடத்தறது போர், 'முடிவே' கிடையாது!

- வெ. சீதாராமன்





பகலெல்லாம் இரும்பைப் பிடிக்கிற கையில் இரவில் தூரிகை ஏந்துகிற ஓவியர் கே.எஸ்.ஜோசப், அடிப்படையில் மெக்கானிக்கல் இஞ்ஜினீயர்.

''என்னுடைய பணிச் சூழல் எப்போதுமே கரடுமுரடானது. அதிலிருந்து என்னை மீட்டெடுக்கும் உபாயம்தான் எனக்கு ஓவியம். நான் அடிப்படையில் விவசாயக் குடும்பத்தைச் சார்ந்தவன். உழைப்பின் பரிணாமங்களைப் பார்த்துக் கொண்டே வளர்ந்தவன். அதனால்தான் என் ஓவியங்களில் பெரும்பாலும் உழைப்பின் தருணங்கள் என்னை அறியாமல் பதிவாகி விடுகின்றன'' என்கிற ஜோசப்புக்குப் பூர்வீகம் கேரளா. தமிழ்நாட்டுக்கு வந்து முப்பத்துரெண்டு வருடங்கள் ஆயிற்றாம். ''எனது ஓவியங்கள் என்றைக்குமே விற்பனைக்கு அல்ல; ஆத்ம திருப்திக்குதான். என் வண்ணங்களில் மயங்கிக் கேட்பவர்களுக்கு மட்டும் கொடுக்கப்படுவதுண்டு'' என்கிறார் இவர். தம் ஓவியங்களுக்குக் கேரளாவின் லலித்கலா அகாதெமி விருது (1995) பெற்றிருக்கும் ஜோசப், ''நவீன ஓவியங்கள் என்ற பெயரில் வரைகிறவனுக்கும் என்ன நாம் வரைகிறோம் என்று தெரியாமல் பார்க்கிறவர்களுக்கும் போய்ச் சேராமல் இருக்கும் ஓவியங்கள் மீது பெரிதாக மதிப்பு இல்லை. கலைக்குப் புதிதாகக் கற்றுக் கொடுக்கும் கடமை இருக்கிறதுதான். அதற்காக ஏற்கெனவே புரிதலோடு இருக்கிற ஒரு விஷயத்தை நிர்மூலமாக்கக் கூடாது'' என்கிறார்.



கே.எஸ்.ஜோசப்

- மகிமைராஜன்

# மனத்தைக் கவர்ந்த மெட்டாலிக் குரல்!

சங்கரா டி.வி.யில் ஒவ்வொரு சனிக்கிழமை காலை 11.30 மணிக்கும் ஞாயிறு இரவு 9 மணிக்கும் ஒளிபரப்பாகும் 'தர்ம சாஸ்திரம்' நிகழ்ச்சி பயனுள்ளதாக இருக்கிறது. நமது வாழ்வியல் முறைகளையும் கடமைகளையும் முன்னோர்களுக்குச் செய்யவேண்டிய முக்கியமான கடமைகளையும் பற்றி சேஷாத்ரி சுவாமிநாத சுவாமிகள், கேள்விகளுக்குப் பதிலளிக்கும் வகையில், வேதங்களும் தர்ம சாஸ்திர நூல்களும் எவ்வாறு வரையறுத்துக் கூறுகின்றன என்று தெள்ளத் தெளிவாக விளக்கிக் கூறுகிறார். இதன் மூலம் பயனுள்ள பல விஷயங்களை அறிந்துகொள்ள முடிகிறது. நாங்கள் வாரந்தோறும் தவறாமல் பார்க்கும் நிகழ்ச்சி இது.

- பாமதி நாராயணன், பெங்களூரு.

கலைஞர் தொலைக்காட்சியின் 'மறக்க முடியுமா' நிகழ்ச்சி எல்லோரும் பார்க்க வேண்டிய ஒன்று. மறைந்த திரையுலகக் கலைஞர்களின் மறக்கமுடியாத நிகழ்வுகளைச் சிறப்பான முறையில் ஒளிபரப்பி வருவது பாராட்டுக்குரியது.

பாடகர் சீர்காழி கோவிந்தராஜனைப் பற்றிய அரிய தகவல்களைத் தொகுத்தளித்தது நன்றாக இருந்தது. இலண்டன் நகரில் சீர்காழியின் இன்னிசை நடைபெற்ற நிகழ்ச்சியைப் பார்க்கும் போது மெய்சிலிர்த்துப் போனேன்.

- ஆர்.விஸ்வநாதன், கே.கே.நகர்.

ஜெயா டி.வி.யில் 'மனதோடு மனோ' வில் பாடகர் மனோ... நிறைய பாடகர்களைப் பாடல்கள் மூலமாகவே பேட்டி காணும் ஜனரஞ்சகமான நெகிழ்ச்சியான நிகழ்ச்சி...! பாடத்தெரிந்த நேயர்களும் அந்தந்த எபிசோடின் பிரபலங்கள் முன்னால் பாடலைப் பாடலாம்! அதற்கும் வாய்ப்பு உண்டு...

நித்யஸ்ரீ மகாதேவன்...! முதன்முதலாய் 13 வயதில் மியூசிக் அகாடெமி மினி ஹாலில் பாடி வெற்றிபெற்றது முதல், தம் பாட்டி பட்டம்மாள், தம் கலைக் குடும்பம்... மேடைக் கச்சேரி... திரைப்படப் பாடல்களுக்கு வந்தது, கச்சேரி அனுபவங்கள்... தம் மெட்டாலிக் குரலால் பேசியும் பாடியும் கிறங்கடித்தார்.

அளவான மேக்கப், கண்ணை உறுத்தாத ஆடை ஆபரணம்... கொள்ளைகொள்ளும் வெள்ளையான சிரிப்பு என்று களைகட்டியது நிகழ்ச்சி... அவருடைய கச்சேரியைப் போல.

- ஜே.சி.ஜெரினா காந்த், ஆலந்தூர்.

என் கணவரும் நானும் கட்டாயம் பார்த்து ரசிப்பது சன் தொலைக்காட்சியில் சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் ஒளிபரப்பாகும் சுகி சிவம் சொல்லும் ''இந்த நாள் இனிய நாள்'' நிகழ்ச்சிதான். அவர் சொல்லாத விஷயமே

டி.வி.யில் உங்களுக்குப் பிடித்த நிகழ்ச்சி எதுவாயினும்... 'சேனல் சாய்ஸ்' என்று குறிப்பிட்டு எழுதுங்க. kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம்.

இல்லை. ஆன்மிகம், வரலாறு, அறிவியல், தத்துவம் இவற்றில் பாண்டித்தியம் பெற்ற வர்களின் உரைகளின் மேற்கோள்கள், குட்டிக் கதைகள், வாழும் கலை பற்றிச் சொல்கிறார். இந்த நிகழ்ச்சியைப் பார்த்தால் செல்ஃப் மேனேஜ்மெண்ட் கிளாசுக்குப் போய் வந்த பலன் கிட்டும்! ஒருநாள் பேச்சைக் கேட்டாலே ஒரு புத்தகம் படித்ததற்குச் சமம்.

- மீனாக்ஷி கோபாலன்,
பெங்களூரு.

பிரசுரமாகும் ஒவ்வொரு விமர்சனத்துக்கும் ரூ.50 சன்மானம்

## சேனல் சாய்ஸ்

**வி**ஜய் டி.வி.யில் தினமும் ஒளிபரப்பாகும் மகான் தொடர் எங்கள் குடும்பத்தினருக்குப் பிடித்த நிகழ்ச்சி! நடிகர்கள் ஒவ்வொருவரும் பாத்திரத்துக்கு ஏற்றவாறு பொறுப்போடும் இயல்பாகவும் நடிக்கிறார்கள்.

குறிப்பாக வேங்கடநாதன், சரஸ்வதியாக நடிப்பவர்களின் முகபாவம் மிகவும் அருமை. வறுமையில் வாடுவது, தண்ணீரைக் குடித்துப் பசியாறுவது, சாப்பிட உட்கார்ந்தவரை எழுப்புதல்... போன்ற காட்சிகள் மனத்தை உருக்குகிறது.

ஸ்ரீமடத்தில் குருவாக நடிப்பவரின் நடிப்பு மிகவும் தத்ரூபம்.

- சுஜாதா சுந்தர்,
நவி மும்பை.

**அ.இ.அ.தி.மு.க. அணியின் சூத்திரதாரர் என்று தி.மு.க.வினால் விமர்சிக்கப்படுபவர் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் தா.பாண்டியன். தமது அணிக்கு வலுவேற்றும் வகையில் யுக்திகளை வகுக்கும் அவரைச் சந்தித்தோம்...**

**பல சாதனைகளைச் செய்திருப்பதால் 'மக்கள் எங்களையே மீண்டும் தேர்ந்தெடுப்பார்கள்' என்று தி.மு.க. சொல்கிறதே?**

''இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு காங்கிரஸ் ஆட்சி, தொழிற்சாலைகள், அணைகள், பள்ளிகள், கல்லூரிகள் என்று பல வளர்ச்சிப் பணிகளைச் செய்தது. இன்றைக்கு ஐந்து முட்டை போடுகிறாரே கருணாநிதி, அதற்கு முன்னோடியாக அடிப்படையாக அமைந்தது காமராஜர் கொண்டு வந்த மதிய உணவு திட்டம்தான். எந்த காங்கிரஸ் அமைச்சர் மீதும், இன்று அள்ளி விடப்படுவதுபோல ஊழல் குற்றச்சாட்டுக்கள் கிடையாது. இன்றும் கறைபடியாக் கரங்கள் என்பதற்கு ராஜாஜி, காமராஜ், கக்கனைத்தான் உதாரணம் காட்ட வேண்டியிருக்கிறது. அப்படிப்பட்ட காங்கிரஸ் ஆட்சியை ஒன்பது கட்சி கூட்டணி அமைத்துத்தான் தோற்கடித்தது தி.மு.க. இன்றைக்கு தி.மு.க. அமைச்சர்களைப் பற்றி மக்களின் மதிப்பீட்டைக் கேட்டால் ''இவ்வளவு சீரழிவா'' என்று கொதிக்கிறார்கள். மக்கள் தி.மு.க. ஆட்சியை விரட்டுவது என்று முடிவெடுத்துவிட்டார்கள். அந்த அளவுக்கு நாங்களும் வலுவான கூட்டணியை அமைத்திருக்கிறோம். ஐரோப்பாவைக் கட்டியாண்ட ரோம சாம்ராஜ்யம் வீழ்வதற்கு முன் அதன் ஆட்சியாளர்கள் ஆட்டம், பாட்டம், கொண்டாட்டம் என்று பொழுதுபோக்கிக் கொண்டிருந்தார்கள். அதுபோன்ற நிலைதான் இப்போது தமிழகத்திலும் இருக்கிறது.''



**உங்கள் கூட்டணி பலமாக உள்ளது என்கிறீர்கள். ஆனால் இதே கூட்டணிக்கு பாராளுமன்றத் தேர்தலில் எதிர்பார்த்த வெற்றி கிடைக்கவில்லையே?**

''2009 பாராளுமன்றத் தேர்தலில் எங்கள் அணியில் தலித் மற்றும் இஸ்லாமியர்களின் கட்சிகள் இடம்பெறவில்லை. அதுவே நாங்கள் எதிர்பார்த்த வெற்றி கிடைக்காததற்குக் காரணம். ஆனால், இன்று புதிய தமிழகமும், த.மு.மு.க.வும் எங்கள் அணியில் இருக்கிறார்கள். பா.ம.க.வும் இறுதியில் அ.இ.அ.தி.மு.க. அணிக்கு வரும் கட்டாயம் ஏற்படும். தி.மு.க. அந்த அளவுக்கு ராமதாஸை அவமானப்படுத்தியிருக்கிறது.''

**மக்களுக்குத் திட்டங்கள் மூலமாகப் பலன் கிடைக்கும்போது அவர்களை நேரடியாகப் பாதிக்காத முதல்வரின் குடும்ப அதிகாரப் போட்டிகள் காரணமாக மக்கள் தங்கள் ஆதரவை மாற்றிக் கொள்வார்களா?**

# "விஜயகாந்த் எங்கள்

''ஒன்று புரிந்துகொள்ளுங்கள். இன்று தமிழக அரசின் நிர்வாகம் முதல்வர் குடும்பத்தைச் சேர்ந்த முப்பதுபேரின் தொலைபேசி உத்தரவு படிதான் நடக்கிறது. மதுரையில் முதல்வர் மகன் உத்தரவின் பேரில் மாவட்ட ஆட்சியாளர் மூன்று மணி நேரத்தில் மாற்றப்பட்டார். தர்மபுரி பஸ் எரிப்பு வழக்கில் மூன்று பேருக்குத் தூக்குத் தண்டனை கிடைத்ததை 'நீதி வென்றது' என்று பாராட்டிய மக்கள், தினகரன் பத்திரிகையில் மூன்று பேர் எரிக்கப்பட்ட விஷயத்தில் 'நீதி வெல்லுமா?' என்று கேள்வி எழுப்புகிறார்கள். நிலப்பறி, நீதி மோசடி, குண்டர்கள் ராஜ்யம், கேபிள் கொள்ளை, வர்த்தக மோதல் என்ற நீண்ட பட்டியலுக்குப் பின்னே பார்த்தால் ஆளும் குடும்பமோ அல்லது ஆளும் கட்சி ஆதரவாளர்களோ இருப்பது புரியும். இந்தச்



**- தா.பாண்டியன் தகவல்**

# அணிக்கு வருவார்!”

செயல்கள் மக்களைப் பாதிக்கவில்லையா?''

**ஜெயலலிதா ஆட்சியில் இருக்கும்போது சசிகலா குடும்பத்தின் மீதும் இதேபோன்று குற்றச்சாட்டுகள் சொல்லப்பட்டனவே?**

''1996-ல் ஜெயலலிதா உட்பட ஒட்டு மொத்த அமைச்சரவையும், தேர்தலில் மக்களால் தோற்கடிக்கப்பட்டனரே!''

**முதல்வரின் குடும்பம் திரைப்படத் தயாரிப்பில் பல்லாண்டுகளாக இருக்கிறது. அப்படியிருக்க அவரது பேரன்கள் படம் எடுப்பதை விமர்சிப்பது சரியா?**

''அரசாங்க அதிகாரத்தைப் பின்பலமாக வைத்துக்கொள்ளாமல், சுயமாக யார் தொழில் செய்தாலும் குறை சொல்ல முடியாது. ஆனால், இங்கே அதுவா நடக்கிறது? படம் எடுக்கும் பேரன்கள் தனி சாதனையாளர்கள் என்று முதல்வர் சொல்லுவது தாத்தாவின் பாசத்தைக் காட்டலாம்; ஆனால் ஒரு நிர்வாகியின் நேர்கொண்ட பார்வை அழிந்துவிட்டது; அந்தப் பேரன்களுக்கு வருமானம் என்ன? இல்லையென்றால் யார் பணம் கொடுக்கிறார்கள்?''

**அ.தி.மு.க., காங்கிரஸைக் கூட்டணிக்குள் இழுத்தால் உங்கள் நிலை?**

''அது அ.தி.மு.க.வின் முயற்சி மற்றும் விருப்பமாக இருக்கலாம். நடக்குமா நடக்காதா என்று தெரியாது. நடந்த பிறகு பேசிக்கொள்ளலாம். காங்கிரஸ் உடன் இருந்தால் மத்திய அரசின் அதிகாரப் பின்னணி, நிதி உதவி வெற்றிக்கு உதவியாக இருக்கும் என்று தி.மு.க. - அ.தி.மு.க. இரண்டுமே கருதுகின்றன. ஆனால், காங்கிரஸ் ஆதரவாளர்கள் கூட தி.மு.க.வுக்கு வரும் தேர்தலில் வாக்களிக்க மாட்டார்கள்.''

**விஜயகாந்த்...?**

''அவர் தனித்து நின்றால் தி.மு.க. எதிர்ப்பு வோட்டுகள் பிரிந்து கருணாநிதிக்கே மீண்டும் வாய்ப்பு கிடைக்கும். விஜயகாந்த் தனித்து நிற்பது எங்கள் அணிக்கு நல்லதல்ல. அவருடன் தொடர்ந்து பேசிக் கொண்டிருக்கிறோம். எங்கள் அணியில் அவரைச் சேர்க்க முயற்சிப்போம். தி.மு.க.வைத் தோற்கடிப்பது விஜயகாந்த் இலட்சியமாக இருப்பின் அவர் தனியே நிற்கத் துணிய மாட்டார்.''

**வாக்காளர்களுக்குப் பணம் கொடுக்கும் இடைத்தேர்தல் யுக்தி, சட்டமன்றத் தேர்தலிலும் தொடரும் என்கிறார்களே?**

''பணம் - அதிகார பலம் இந்திரா காந்திக்கு இருந்தது. ஆனால் அவரையே தோற்கடித்தார்கள் மக்கள். இதே போல் பதவியில் இருந்தபோது அ.தி.மு.க.வும் தோற்றிருக்கிறது. இடைத்தேர்தல் யுக்தி எடுபடாது. இடைத்தேர்தல்கள் ஆட்சி மாற்றத்தைக் கொண்டு வராது என்பதால், ஆளும் கட்சியின் தந்திரங்கள் மக்களிடம் எடுபடும். ஆனால், பொதுத்தேர்தல் வித்தியாசமானது. இப்போது மக்கள் கொதித்துப் போயிருக்கிறார்கள். தங்களுக்கு எதிராக அலை வீசுவது கருணாநிதிக்கு நன்றாகவே தெரியும்.''

**சி.பி.எம். கோவிந்தசாமியைத் தொடர்ந்து உங்கள் கட்சி சிவபுண்ணியத்தையும் கட்சித் தாவ வைக்க ஆளும் கட்சி முயற்சி செய்கிறதா?**

''இதுபோன்ற வதந்திகளை, சிவபுண்ணியம் மறுத்துள்ளார். மற்ற கட்சிகளை உடைப்பது என்பதை தி.மு.க. ஒரு தொழில்முறையாகவே வைத்திருக்கிறது. எங்கள் விஷயத்தில் கருணாநிதி நினைப்பது நடக்காது.''

**- ப்ரியன்**

கல்கி

தீபாவளி மலர்

2010

படிக்க... ரசிக்க... பரிசளிக்க...

- அதிரசமான ஆன்மிகச் செய்திகள்!
- வெடி ஜோக்ஸ்!
- பரவசமூட்டும் பயணங்கள்!
- மனசுக்குப் புத்தாடை போர்த்தும் சிறுகதைகள்!
- வாணங்களை விஞ்சும் வண்ணமடல்!
- கருத்தில் தித்திக்கும் கவிதைமடல்!
- புதுப்புது ருசிகளில் விதவிதமான தகவல்கள்!

கோகுலம், மங்கையர் மலர் பக்கங்கள்

பொக்கிஷமான ஓவியங்கள்

அமரர் கல்கி, டி.கே.சி., ராஜாஜி படைப்புகள்

விலை ரூ.120 மட்டும்

உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்யுங்கள் அல்லது கூரியர் மூலம் பெற ரூ.30/- சேர்த்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்புங்கள்: விற்பனை மேலாளர், கல்கி தீபாவளி மலர், கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, சென்னை - 600 032. தொடர்புக்கு : 044-43438844

# ஆஹா ஆல்பம்



தஞ்சாவூரில் கல்யாணசுந்தரம் மேல்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியராக நான் பணியாற்றும்போது 1994ஆம் ஆண்டில், 'மாநில நல்லாசிரியர்' விருதினைப் பெற்றேன். அவ்வாண்டு 10ஆம் வகுப்புப் பொதுத்தேர்வில், பள்ளி 100 விழுக்காடு தேர்ச்சி பெற்றது. அதனையொட்டி நடைபெற்ற பாராட்டு விழாவில் கலந்து கொண்ட, தமிழக வணிகத் துறை அமைச்சர், S.N.உபயதுல்லா அவர்கள் எனக்குப் பொன்னாடை அணிவித்தபோது எடுக்கப்பட்ட புகைப்படம் இது.

- டி.வி.ராமமூர்த்தி,
குரோம்பேட்டை





**வாசகர்களே!** திருமண ஃபோட்டோ மட்டுமல்ல, நீங்கள் பெரிதும் ரசிக்கும், பொக்கிஷமாகப் பாதுகாக்கும் ஃபோட்டோ எதுவாயினும் 10 வரிகள் குறிப்புடன் ஜம்முன்னு எழுதி அனுப்புங்க...

நான் காங்கிரஸ் கட்சி
ந்து அரசியலில் முழுக்க முழுக்க
யங்குவதற்குக் காரணகர்த்தா மக்கள்
லைவர் ஐயா மூப்பனார்தான். காமராஜர்
ரங்கத்தில் நடந்த காங்கிரஸ் இளை
ர்கள் சம்பந்தப்பட்ட ஒரு விழாவில்
ன் ஐயா மூப்பனார் அவர்களைச் சந்தித்
தன். என் தலைமையில் கூடியிருந்த
ளைஞர்களைப் பார்த்தவர், ''நீ என் காங்
ரஸில் சேர்ந்து பணியாற்றக்கூடாது''
ன்று கேட்டார். அப்போது நான்
சன்னை சட்டக்கல்லூரி மாணவன். தமி
ழக் காங்கிரஸில் பெருந்தலைவர் காம
ஜருக்குப் பிறகு, கொண்ட கொள்கைக்
ாக வாழ்ந்த அந்தத் தலைவரின் பெயரில்
ஆரம்பிக்கப்பட்ட 'மூப்பனார் பேரவை'
ன் மாநிலத் தலைவராக இப்போது
ருக்கிறேன். சமீபத்தில் அவரது பிறந்த
ாளின் கொண்டாட்டம் மத்திய கப்பல்
போக்குவரத்துத் துறை அமைச்சர்
ி.கே.வாசன் அவர்களின் வழிகாட்டு
லில் நடந்தபோது எடுத்த புகைப்படம்
து.

- எல்.கே.வெங்கட்,
தலைவர், மூப்பனார் பேரவை



தென்னக ரெயில்வேயின் 150-வது ஆண்டையொட்டி திருவாரூர் - மயிலாடுதுறை சிறப்பு நீராவி இன்ஜின் ரெயில் ஓடியபோது எடுத்த ஃபோட்டோ. அப்போதுதான் நீராவி ரெயில் இன்ஜினுக்குப் பக்கத்தில் நின்று ஒரு ஃபோட்டோ எடுத்துக்கொள்ள வேண்டும் என்ற எனது சிறுவயது ஆசை நிறைவேறியது.

- கே. ராஜேந்திரன், சீனிவாசபுரம்.

**ஃபோட்டோவுடன் இடம்பெறும் ஒவ்வொரு அனுபவத்துக்கும் பரிசு ரூ.50/-**



டைரக்டர் சுப்ரமணியத்துக்காக எடுக்கப்பட்ட விழாவிலே கலந்துகொண்ட பர்த் சென்டினரி செலிபரேஷனில் 'சின்னஞ்சிறு கிளியேவுக்காக' நாட்டியப் பேரொளி பத்மினி உட்கார்ந்தபடி (காலில் எலும்பு முறிவு) அபிநயித்தது இன்றும்கூட மறக்க முடியாத ஒரு நிகழ்வு. பத்மா சுப்ரமணியம் பதம் பாடினார். நாரதகான சபா ஆடியன்ஸ் அத்தனை பேரும் எழுந்து நின்று உற்சாகமாகக் கர ஒலி எழுப்பினர். ஈரோடு டி.சௌந்திரராஜன் என்று என்னை அறிமுகப்படுத்திக் கொண்டதும் மிக மிக மகிழ்ந்து, பேசி, உற்சாக போஸ் தந்தார்.

- T.சௌந்திரராஜன், ஈரோடு.

ஊர்வசி

# அட்ரஸ் இல்லாத கடிதாசி!

ஆந்திராவில் நடந்த ஷூட்டிங்கில் சில்க் ஸ்மிதா ஒரு பாம்பு தேவதையாக வந்து டான்ஸ் ஆடுற மாதிரிக் காட்சிகள் (தேவதையே வந்தாலும் டான்ஸ் ஆடணும் - நம்ம கலை தாகத்துக்கு அளவே இல்லை). அவங்களுக்குக் கொடுத்தது ஒரு ஸ்பெஷல் டிரஸ். தோலால ஆனது மாதிரி - உறை மாதிரி, கோணிப்பையில அரிசியை நிரப்பித் தைக்கிற மாதிரி காலிலிருந்து கழுத்துவரை நீளமான ஸிப். வேர்த்து ஊத்தும் - அதனால... நீச்சல் டிரஸ் போட்டுக்கிட்டு அந்தப் பாம்பு டிரஸுக்குள்ள நின்னு ஸிப்ப இழுத்துட்டா தலையைத் தவிர உடம்பெல்லாம் பாம்பு மாதிரி தெரியும். காத்து இல்லாம வேர்வை வழிஞ்சி ஓடும்போது, அதை யாரு போட்டாலும் நெளிய ஆரம்பிச்சுடுவாங்க... பாம்புமாதிரி! ஓர் ஒதுக்குப்புறமான இடத்துல ஷூட்டிங். சகல வசதியுள்ள கேரவேன் கூட அப்ப இல்லை. வெயில். ஐந்து மணி நேரத்தைத் தாண்டி டுச்சி. அவங்களுக்கு பாத்ரூம் போகணும்னு அவஸ்தை. ஆண்களின் கூட்டமோ திருவிழா கணக்கா இருக்கு. பக்கத்திலேயும் ஒதுங்கமுடியாது. இவன்க அங்கேயும் வந்துடுவான்களோன்னு



பயம். மேனேஜர் காதுல செய்தி நெளிஞ்சி நெளிஞ்சிப் போயிடுச்சி. ஒரு கார்ல ஸ்மிதாவை அழைச்சிக்கிட்டு யாருக்கும் தெரியாம இராணுவ இரகசியத்தைக் கடத்துற மாதிரி ஒதுக்குப்புறமா உள்ள ஓர் ஏரியாவுக்குச் சத்தமில்லாம போய் சேந்தாங்க. அது விஸ்தாரமான பாழடைந்த பங்களா. அந்தப் பெரிய பாழடைந்த வீட்டோட பெரிய கொல்லைப்புறம் போனாங்க. சுற்றிலும் மதில் சுவர். பாதுகாப்பான இடம். ஏன்னா முதல்ல அந்தப் பாம்பு டிரஸ்ஸைக் கழட்டணும். அப்புறமாதான் இயற்கை அழைப்பு. அவங்களோ டூ பீஸ் டிரஸ் போட்டு இருக்காங்க. வண்டி வெளியே மேனேஜரோடு நிற்க, அந்தப் பாம்பு தேவதை, சின்ன மைதானம்போல் இருக்கும் இடத்துக்குப் போனாங்க. சுத்திலும் சுவர். மனித வாசனையே காணோம் என்ற நம்பிக்கையோட உட்கார்ந்து, நிம்மதிப் பெருமூச்சோடு நிமிர்ந்தபோது, 'ஐயோ கடவுளே!'-ன்னு அவங்க கத்தனது கடவுளுக்கும் காது இருந்தா கேட்டு இருக்கும். எங்கிருந்தோ கூட்டமாக வரும் வெளவால்களைப் போல மதில் சுவர் முழுதும் ஆண்களின் தலைகள். குதற வரும் வெறிநாய்களைப் போல... சத்தமின்றி அவங்களின் நிர்வாணத்தை வெறித்தபடி. அவங்களால எழுந்திருக்கவும் முடியாது... அவங்க டிரஸ் கொஞ்சம் தள்ளி ஓரமா இருக்கு. அவங்க கத்துன கத்து மேனேஜருக்குக் கேட்டு, அவரு ஓடி வந்து அவங்கமேல ஒரு துணியைப் போட்டு மூடி காருக்குள் ஏற்றிவந்தார். அந்த நிமிடம் அவங்க உடைந்து அழுத அழுகை நிற்காமல், தேம்பித் தேம்பி கண்கள் சிவந்து இந்த ஆண்களின் மீது கரியைப் பூசியது. ஒரு சராசரி மனுஷியா கூட அவங்களை மதிக்



கல இந்த இரசிக கும்பல். பஸ்ஸில் ஒரு குழந்தைக்கு இளம் அம்மா பால் குடுத்தா அதைத் தாய்மையோட, பரிவோட மதிப்பு அளிக்கும் ஆண்கள் கூட்டம் நடிகையை ஒரு சக மனுஷி என்ற அளவிலாவது மதித்திருக்க வேண்டாமா? இதை அவமானம் என்பதா? ஆண் இரசிகர்களின் அநாகரிகம் என்பதா?



எங்க அக்கா போட்ட கடிதத்தில் கல்பனாங்கிற கையெழுத்தில் 'க' மட்டும் உப்பிக்கிட்டிருக்கும்.

தன் மீதான ஒரு கழிவிரக்கம் மலையெனத் தங்கி அருவியாய் ஓடிய ஸ்மிதாவின் அழுகையால், அந்தப் பாம்பு தேவதை நடனம் அன்று முழுதும் ரத்தானது. ''இந்த ஆடியன்ஸ்கிட்டே நீ ரொம்ப பாசமா இருக்காத! சிரிச்சு சிரிச்சுப் பேசி ஆஹா ஓஹோன்னு புகழ்ந்து ஃபோட்டோ எடுத்துக்கிட்டு, நகர்ந்ததும் நம்ம மேல சேற்றை வாரிப் பூசிட்டுச் சிரிப்பான்க. நம்மள மனுஷியா கூட மதிக்கத் தெரியாத ஆண் ஜந்துங்க'' என்று காரசாரமாக ஸ்மிதா வைத்த குற்றச்சாட்டு அல்லது அபிப்ராயத்தை முறியடிக்காமல் அவங்க சொன்னதை நிரூபிச்சாப்போல ஆச்சேன்னு வருத்தமா ஆயிடுச்சி. சில்க் ஸ்மிதாவிடம் இதுபோன்ற பல பல அழுகைகள், ஏமாற்றங்கள் எழுந்து, அடச்சீ...போங்கடா நீங்களும் உங்க சமூகமும் என்று உமிழாத குறையாக ரொம்ப தைரியமா விமர்சித்ததுதான் அவங்களோட தற்கொலை. அது ஒட்டுமொத்த ஆண் சமூகத்தின் மீதான விமர்சனம்னு நெனைக்கிறேன். சில்க் ஸ்மிதா தப்பான அட்ரஸ் எழுதிட்டு அலைக்கழிக்கப்பட்ட அர்த்த பூர்வமான அழகிய கடிதம்.

நாமெல்லாம் கூட கடவுளின் கடிதாசிகள்தான் இல்லே. என்னென்ன செய்திகளைக் கொண்டு வந்தோம். கொண்டு போறோம். எனக்குக் கடிதம்னா, கடிதம் எழுதறதுன்னா ரொம்ப புடிக்கும். பல கடிதங்களை நான் வெச்சிருக்கேன். எங்க அக்கா கடிதம் போட்ட கல்பனாங்கிற கையெழுத்தில 'க' என்ற எழுத்து மட்டும் பெரிசா எட்டு மாச வயிறுமாதிரி உப்பிக்கிட்டு இருக்கும் - லெட்டரிலே அந்த 'க' புள்ளை பெக்குற மாதிரி. அடடா! வஞ்சனை இல்லாம வரிகளால வாழ்த்துற கர்ணபிரபு டைரக்டர் பாலசந்தர்தான். ஒருத்தர் எழுதற கடிதத்தை வெச்சே அவங்க மூளையோட முகத்தைப் பார்த்துடலாம். அப்படியான கடிதக் கலைஞர்கள் பற்றி அடுத்த வாரம்...

(தொடரும்)

# ஊர்வசி போட்டி சில்கி சாரி!



## மாதம் 3 புடைவைகள் பரிசு!

**வாசகர்களே!**

ஊர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு!' தொடரைத் தொடர்ந்து படிங்க... தொடரையொட்டி வாரம் ஒரு கேள்வி கேட்கப்படும்.

ஒவ்வொரு வாரமும் ஒரு கூப்பன் இடம்பெறும். விடைகள் மற்றும் உங்களின் பெயர் முகவரி ஆகியவற்றை அதிலேயே எழுதி இணைத்து மொத்தமாய் ஒவ்வொரு மாத இறுதியிலும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

சரியான விடை எழுதிய மூன்று வாசகர்கள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, அம்மாதத்துக்கான அதிர்ஷ்டசாலிகளாகப் புடைவைப் பரிசு பெறுவார்கள். **தொடரின் இறுதியில் ஒரு மெகா பரிசும் உண்டு!**

அக்டோபர் மாதக் கூப்பன்களை இணைத்து அனுப்ப

கடைசித் தேதி : **09.11.10**

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**அனுப்பவேண்டிய முகவரி:**
கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

---

பெயர் : ..................................................

முகவரி : ..................................................

..................................................

..................................................

........................பின்கோடு:........................

தொலைபேசி : ..................................................

இ-மெயில் : ..................................................

அக்டோபர் - 10

**வஞ்சனை இல்லாமல் வாழ்த்துக்களை தானம் செய்யும் கர்ண பிரபு யார்?**

*விடையை டிக் செய்யவும்*

- ☐ சில்க் ஸ்மிதா
- ☐ கல்பனா
- ☐ பாலசந்தர்
- ☐ கடவுள்

87



**வி**யப்பாக இருந்தது எனக்கு.

நல்லாசிரியர் விருது கிடைப்பதற்கு ரெகமண்டேஷனா?

தலைமையாசிரியரின் பரிந்துரை, மாவட்டக் கல்வி அதிகாரி, மாவட்ட ஆட்சியர் அப்ரூவல் இதெல்லாம் வேண்டும் என்பார்களே...

வீடு தேடி வந்திருந்த அந்த ஆசிரியரைப் புரியாமல் பார்த்தேன்.

திருவாரூர் பாபு

# நல்லாசிரியர்

"நல்லாசிரியருக்கு உண்டான தகுதி உங்களுக்கு இருக்குன்னு எப்படிக் கல்வித் துறைல நம்புவாங்க" என்றேன்.

"என்னைப் பத்தின முழு விவரத்தையும் மாவட்டக் கல்வி அதிகாரிக்கு அனுப்பிட்டேன் சார். எங்க மாவட்டத்துல மொத்தம் இருபது பேர் விண்ணப்பிச்சிருக்கோம்... அஞ்சு பேருக்குக் கொடுப்பாங்க சார். ஆனா ரெகமண்டேஷன் இல்லாம கிடைக்காது சார். உங்களுக்கு வேண்டப்பட்டவர் ஒருத்தர் எஜுகேஷன் மினிஸ்டருக்கு ரொம்ப நெருக்கம்னு கேள்விப்பட்டேன். நீங்க மனசு வச்சா..."

கிட்டத்தட்ட ஐம்பது வயதைக் கடந்த கணக்கு வாத்தியார் என்னிடம் நல்லாசிரியர் விருதுக்காகப் பணிவு காட்டியது ஒரு மாதிரியாக இருந்தது.

"சிறப்பாக ஆசிரியப் பணி புரிஞ்சாதானே விருது கொடுப்பாங்க..."

அவர் கூறிய விளக்கம் புரியாமல் கேட்டேன்.

அவர் தர்மசங்கடமாகச் சிரித்தார்.

"இப்ப தகுதி மட்டுமே முக்கியம் கிடையாது சார்... மாவட்டச் செயலாளர், மினிஸ்டர் இவங்க ரெகமண்டேஷனுக்குத்தான் முன்னுரிமை சார். எங்க மாவட்டச் செயலாளர் அவரோட கொழுந்தியாளுக்கு ரெகமண்டேஷன் பண்ணியிருக்காரு. மந்திரி எங்கள் ஸ்கூல் பிஸிகல் டீச்சருக்கு ரொம்ப நெருக்கம். அவங்களுக்கு ரெகமண்டேஷன் பண்ணியிருக்காரு. நீங்க நெனச்சா... எனக்குக் கிடைக்கும். முப்பது வருஷ ஆசிரியர் பணிக்கு ஓர் அங்கீகாரம் கிடைச்ச மாதிரி இருக்கும்..."

"சரி முயற்சி பண்றேன். நீங்க சொல்ற மாதிரி கல்வி அமைச்சருக்கு நெருக்கமான ஒருத்தர தெரியும். ஆனாலும் உங்களுக்கு விருது கிடைக்கும்னு என்னால உறுதி சொல்ல முடியாது... நீங்க கொடுத்த பேப்பர், மினிஸ்டர் கவனத்துக்கு நிச்சயம் போகும்" என்றேன்.

"நன்றி சார்"

அவர் நகர்ந்தார்.

**எ**னக்குத் தெரிந்து எங்கள் ஊரில் வரதராஜன் என்றொரு ஆசிரியர் இருந்தார். சிறப்பான பணிக்காக நல்லாசிரியர் விருது பெற்றார். அந்த விருதுக்கு முற்றிலும் தகுதியானவர். கல்விக்காகத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டவர். அப்போதெல்லாம் நல்லாசிரியர் விருது என்பது அத்திப்பூத்தாற் போன்ற விஷயம். விருது கிடைத்ததற்காக ஒரு வருட காலம் அவருக்குப் பாராட்டு விழாக்கள் நடந்தன. ஊரே திரண்டு அவரைக் கௌரவித்தது. இறந்த பின்னும் தனது உடலைத் தானமாகத் தந்து, மருத்துவம் பயிலும் மாணவர்களுக்குப் பாடமாகிப் போனார்.

ஆனால், இப்போது நல்லாசிரியர் விருதுக்கு மாவட்டச் செயலாளர், மந்திரி ரெகமண்டேஷன் என்கிறார்கள். ஒரு மாவட்டத்துக்கு ஐந்து பேர் வீதம் விருது கொடுக்கிறார்கள் என்கிறார். ஆறாவதாக சிறப்

பாகப் பணியாற்றிய ஆசிரியர் ஒருவர் இருந்தால் அவருக்குக் கிடையாதா? ஒன்றும் புரியவில்லை எனக்கு.

ஆனாலும் அடுத்த நாளே அவர் கொடுத்த விவரங்களை எனக்கு நெருக்க மானவரிடம் கொடுத்தேன்.

''எனக்கு வேண்டப்பட்டவர் ஒருவர் நல்லாசிரியர் விருதுக்கு விண்ணப்பித்திருக்கிறார். தகுதி அடிப்படையில் பரிசீலனை செய்யுங்கள்'' என்றேன்.

சில நாட்கள் சென்றிருக்கும்.

அதிகாலையில் காலிங் பெல் அழைப்பு.

திறந்தேன். நல்லாசிரியர் விருது வேண்

''என்னோட ரெகமண்டேஷன் மட்டும் காரணமா இருக்க முடியாது. விருதுக்குண்டான தகுதி உங்களுக்கு இருந்திருக்கு...'' என்றேன்.

''தகுதியெல்லாம் யார் சார் பார்க்கிறாங்க... ரெண்டு வருஷம் ஸ்கூலுக்கே போகாத ஒரு மச்சருக்கு விருது கொடுத்திருக்காங்க சார்...'' என்றவர். ''உங்களுக்குப் பழக்கம் இருக்குமான்னு தெரியல. இருந்தா வச்சிக்குங்க. இல்லாட்டி உங்களுக்கு வேண்டியவங்க யாருக்காவது கொடுத்திடுங்க'' என்றபடி அந்த அசத்லான அட்டை பாக்ஸை நீட்டினார்.

''ஃபாரின் பிராந்தி சார். ஃபுல் பாட்




டிய கணக்கு வாத்தியார்.

முகமெல்லாம் மலர்ச்சி.

''சார் விருது வாங்கிட்டேன் சார். கிடைச்சவுடனே உங்களுக்குத்தான் ஃபோன் போட்டேன். செல்ஃபோன் ஆஃப்ல இருந்துச்சு... நேத்துதான் வாங்கினேன். இந்தப் பதக்கமும், பாத்தாயிரம் பணமும் கொடுத்தாங்க சார்...''

''ஊர்ல இல்ல. தில்லி போயிருந்தேன். ரொம்ப சந்தோஷம்...''

''பெருமையா இருக்கு சார். நீங்க ரெகமண்ட் பண்ணலேன்னா சத்தியமா விருது கிடைச்சிருக்காது சார்... கிராமத்துல எல்லோருக்கும் ரொம்ப சந்தோஷம் சார்...''

வார்த்தைக்கு வார்த்தை சார் போட்டார்.

டில். பத்தாயிரம் ரூவா. ஸ்விட்சர்லாந்துலேருந்து என் மச்சான் வாங்கிட்டு வந்தாரு...'' என்றார்.

எந்தவிதமான ரியாக்ஷனை அவரிடம் காட்டுவது என்று எனக்குப் புரியவில்லை.

''சாரி... இதெல்லாம் எனக்குப் பழக்கமில்லை'' என்றேன் அவசரமாக.

''அப்ப வர்றேன் சார்...'' என்றபடி நகர்ந்தார்.

நல்லாசிரியர் விருதுக்கு ரெகமண்டேஷன், விருது கிடைத்ததற்கு அன்பளிப்பாக ஃபுல் பாட்டில் பிராந்தி. ஒன்று தெளிவாகப் புரிந்தது; இந்தக் காலத்து மாணவர்கள் பாவம்!

●

**நே**தாஜிக்கு நிகர் நேதாஜிதான். சிங்கத்தை நேரில் பார்த்த சிலிர்ப்புடன் தமது உணர்வுகளை வெளிப்படுத்தியுள்ளார் அருணாசலம். **- ப.கீர்த்தி, பாபநாசம்**

**கா**ப்பீடு ஸ்பெஷல் என அறிவித்து விட்டு காப்பீட்டுத் துறையில் சிறந்து விளங்கும் அஞ்சலகக் காப்பீட்டுத் திட்டம் பற்றியும், கிராமப்புற அஞ்சலகக் காப்பீட்டுத் திட்டம் பற்றியும் வாய்திறக்காதது ஏன்? **- என். காளிதாஸ், சிதம்பரம்**

'**க**விதை கஃபே'யில் கவிதைகளாக வரைந்து நமது வாசகர்கள் தூள் கிளப்பராங்கப்பா! சூப்பர்!

**- பி. கோவிந்தசாமி, ஊத்தங்கரை**

**பெ**யரை மாற்றினால் வாழ்க்கை 'ஓகோ'வென்று மாறிவிடும் என்று நினைப்பவர்களுக்கு 'அது வெறும் மூடநம்பிக்கை' என்ற ஹரிகேசநல்லூர் வெங்கட்ராமனின் பதில் சரியான நெத்தியடி. **- மு.மதிவாணன்,**

**அரூர் ச**ர்ச்சிலின் இன்னொரு முகத்தினை மது ஸ்ரீமுகர்ஜியின் புத்தகம் வாயிலாக ஞாநி விளக்கியிருந்தது தெரிந்துகொள்ள வேண்டிய செய்தி.

**- சு.இந்துமதி, நெய்வேலி**

**ஓ**வியங்களில் இயற்கை நேசத்தை வலியுறுத்தும் ஷர்மிளா பாராட்டுக்குரியவர். **- கே.வி.ராமன், சேலையூர்**

'**ந**ம்பிக்கையூட்டும் நீதித்துறை நிகழ்வுகள்' என் மனத்தை நெகிழச் செய்தது. நீதிபதி.கே.சந்துருவின் செயல்பாடுகள் போன்று ஏனைய நீதிபதிகளின் செயல்பாடுகளும் அமையுமாறு நீதிதேவனைப் பிரார்த்திக்கின்றேன்.

**- வி. ஆனந்தகிருஷ்ணன், கடலூர்**

'**லா**ல்குடிக்குத் திரும்புங்கள்' என்ற கட்டுரை திரும்பத் திரும்பப் படிக்கத் தூண்டும் கட்டுரை. பிரபல பின்னணி பாடகியான பாம்பே ஜெயஸ்ரீ, ஹரிகதையில் வெளுத்துவாங்கும் விசாகா ஹரி போன்றவர்களின் குருவான லால்குடிக்கு கல்கியில் கட்டுரை வெளியிட்டு, அவரை கௌரவப்படுத்தியிருக்கிறீர்கள்.

**-ஜி.லட்சுமி வாசுதேவன், வேளச்சேரி**

# வட்டமேஜை



# மாறுவாரா..?

**ஜெ.,** நினைத்தால் மாற்றம் வரும் என்று 'திருமா' சொல்வதைப் பார்த்தால் அவர் அணி மாறத் தயாராகிவிட்டார் போல் தெரிகிறது!

**- எம்.எஸ்.கே. அருண், முனியங்குறிச்சி**

கிரிக்கெட் வீரர் தோனியின் முதுகில் ஒரு குண்டுச் சிறுவன். அவனுடைய எடையையும் தாங்கிக்கொண்டு, தண்டால் எடுக்கிறார் தோனி. நெற்றி வேர்வை நிலத்தில் விழுகிறது. அருகில் உட்கார்ந்திருக்கும் தோனியின் கோச், ''படவா... நல்லா பண்ணு.'' என்று சொல்லும் வகையில் நக்கலாகச் சிரித்துக்கொண்டிருக்கிறார். தண்டால் முடிந்ததும் தன் கைகளின் உறுதியான சதை அமைப்பைப் பற்றி தனக்குத் தானே ஒரு பெருமித உணர்வுடன், டி.வி.எஸ். ஸ்டார் சிட்டி பைக்கை உதைத்துக் கிளப்புகிறார். பைக் பறக்கிறது. அவருடைய உறுதியான உடலமைப்பும், அத்துடன் கலந்த ஆவேசமான முரட்டுத் தனமும், வண்டியை உதைத்து ஸ்டார்ட் செய்து ஓட்டும் ஸ்டைலுக்கும் ஈடுகொடுக்கும் ஒரே வண்டி ஸ்டார் சிட்டிதான் என்று அந்த விளம்பரப் படம் சொல்லும் செய்தி 'பச்'சென ஒட்டிக்கொள்கிறது. தோனியின் ரசிகர்கள் மட்டுமல்ல, பொதுவாகவே இளைஞர்கள் மனத்தைக் கவரும் இந்தப் படத்தால் ஸ்டார் சிட்டியின் விற்பனை சக்கைப் போடு போடுகிறது. ஸ்டார் சிட்டியின் பிராண்ட் அம்பாஸிடர் தோனிதான்.

இன்று நுகர்வோர்களை வளைத்துப் போடுவதற்கு நிறுவனங்கள் கையாளும் மற்றொரு யுக்திதான் பிராண்ட் அம்பாஸிடர். பிரபலமான திரையுலக நட்சத்திரங்கள், விளையாட்டு - அதிலும் குறிப்பாக கிரிக்கெட் வீரர்கள்தான் நுகர்வோர் பொருட்களுக்கு பிராண்ட் அம்பாஸிடர்களாகப் போடுகிறார்கள். கிட்டத்தட்ட பதினைந்து வருடங்களாக விற்பனை உலகில் வளைய வரும் இந்தப் பாணியை பாரம்பரியமிக்க டி.வி.எஸ். நிறுவனமும் விட்டுவைக்கவில்லை. 2000 ஆம் வருடத்தில் டி.வி.எஸ். சுசுகி என்ற ஜப்பானிய கூட்டு நிறுவனம், டி.வி.எஸ். மோட்டார் கம்பெனி என்ற முழுக்க முழுக்க இந்திய நிறுவனமாக மாறியது. அதுவரை மொபெட் உலகில் அசைக்க முடியாத இடத்தைப் பெற்றிருந்த டி.வி.எஸ்., மோட்டார் பைக் விஷயத்தில் கொஞ்சம் பின்னணியில்தான் இருந்தது. ஸ்பெக்ட்ரா என்ற ஸ்கூட்டரும் மார்க்கெட்டில் சரியாகப் போகவில்லை. சென்ட்ரா என்ற பைக்கும் கொஞ்சம் தள்ளாடியது.






ஆனால் நிறுவனத் தலைவர் வேணு சீனிவாசன் மனம் தளரவில்லை. முழுக்க உள் நாட்டுத் தொழில்நுட்பத்துடன் 'விக்டர்' என்ற பைக்கைத் தயாரித்து டி.வி.எஸ். மார்க்கெட்டிங்கில் புதுமை படைக்கக் காத்துக்கொண்டிருந்த இளைஞர் படைக்கு, முழு சுதந்திரம் கொடுத்தார் சச்சின் டெண்டுல்கர், பிராண்ட் அம்பாஸிடர் ஆக நியமிக்கப்பட்டார். டி.வி.எஸ். உருவாக்கி வைத்திருந்த நம்பிக்கையையும் சச்சின் மூலம் கவரப் பட்ட இளைஞர்களாலும் 'விக்டர்' பைக் ஓஹோவென்று

விற்பனையானது. இந்தத் துறையில் ஈடுபட்டிருக்கும் மற்றவர்களை விட நாங்கள் யாருக்கும் சளைத்தவர்கள் அல்ல என்று நிரூபித்துக் காட்டியது டிவி.எஸ்.

''இன்றைய சூழலில் பிராண்ட் அம்பாஸிடர் என்னும் விற்பனை யுக்தி தவிர்க்க முடியாதது. முன்பெல்லாம் நுகர்வோர் பொருளை நடிகையோ நடிகரோ விளம்பரப்படுத்தும் போது மக்கள்



# ஆஹா... ஓஹோ... அம்பாஸிடர்ஸ்!

அதை நம்பினார்கள். ஆனால், காலப் போக்கில் 'சும்மா விளம்பரம்தான்' என்ற எண்ணம் மேலோங்கியது. ஆனால் பிராண்ட் அம்பாஸிடர் அந்தப் பொருளுடன் ஐக்கியப்படுத்தப் படுகிறார்,'' என்கிறார் டி.வி.எஸ் மார்க்கெட்டிங் பொது மேலாளர் சீனிவாசன். ''பைக் என்றால் 90 சதம் இளைஞர்கள் ஓட்டுவது வேகம், ஸ்டைல், கொஞ்சம் முரட்டுத்தனம், உடலுறுதி ஆகியவைகளைக் கொண்ட பிரபலம் என்று பார்த்தால் தோனி நினைவில் வருவார். எங்கள் பைக்கும் அவரைப் போலவே உறுதியானது. விரைந்து செல்லக்கூடியது என்பதையும் சொல்லத்தான் ஸ்டார் சிட்டிக்கு அவரை பிராண்ட் அம்பாஸிடராய்ப் போட்டோம். இதற்கு முன் எங்கள் ஸ்டார் பைக்கின் அம்பாஸிடராக சூர்யா இருந்தார். அதே சமயம் இளம்பெண்கள் விரும்பும் ஸ்கூட்டிக்கு நாங்கள் பிராண்ட் அம்பாஸிடர்களாக ப்ரீத்தி ஸிந்தா, திரிஷா மற்றும் சானியா மிர்சா ஆகியோரை நியமித்தோம். இந்த மூவரையும் நினைத்தால் துள்ளல், துடிப்பு, இளமை நம்மை ஆட்கொள்ளுமே. அதனால்தான் செமை சக்ஸஸ் ஸ்கூட்டி'' என்கிறார் சீனிவாசன்.


சீனிவாசன்

பிரபலங்கள் தங்களுக்கென சில நிறுவனங்களை இதுபோன்ற விவகாரங்களை டீல் செய்ய நியமிக்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட பைக்குக்கு அம்பாஸிடராக இருக்கும் போது வேறு எந்த நிறுவன பைக் தொடர்பாகவும் மூச்சு விடக்கூடாது.

இந்தியாவில் பைக் விற்பனை வருடத்துக்கு ஒரு கோடியைத் தொடும் என்று எதிர்பார்க்கப்படும் நிலையில் இன்னமும் நிறைய நடிகர்களையும் நடிகைகளையும் விளையாட்டு வீரர்களையும் பிராண்ட் அம்பாஸிடர்களாகப் பார்க்கும் வாய்ப்பு காத்திருக்கிறது.

**- ப்ரியன்**

# ரியூ கம்மர்ஸ்

இரண்டு சக்கர வாகன மார்கெட்டில்
புதிதாக வந்திருக்கும்,
விரைவில் அறிமுகமாகவிருக்கும்
புதிய மாடல்களின் டிடெய்ல்ஸ்....



இது
ஹீரோ ஹோண்டாவின்
லேட்டஸ்ட் மாடல்
கரிஸ்மா ZMR FI.
அதிகப்பட்ச வேகம்,
மணிக்கு 135 கி.மீ.
மஞ்சள், வெள்ளை,
சிவப்பு, நீலம், கறுப்பு
நிறங்களில் வருகிறது.
விலை: ரூ. 91,000/-



பஜாஜ் பல்சர் 220 S,
முந்தைய பல்சர் 220எஃப்
மாடலின்
நவீனப்படுத்தப்பட்ட பைக்.
ஸ்பெஷாலிடி: கறுப்பு நிறம்.
விலை ரூ. 76,000/-



பாரம்பரிய கம்பீரம் கொண்ட
ராயல் என்ஃபீல்டு
கிளாசிக் புல்லட் 500.
எய்ஷர் தயாரிப்பு.
இதன் அதிக பட்ச
வேகம்: மணிக்கு 129 கி.மீ.
கறுப்பு, நீலம்,
பச்சை, சிவப்பு
ஆகிய வண்ணங்களில்
வருகிறது.



கவாசாக்கி நிஞ்சா 250R.
இது ஜப்பானிய தொழில் நுட்பம்;
பஜாஜ் தயாரிப்பு.
கறுப்பு, சிவப்பு, பச்சை, நீல
நிறங்களில் வருகிறது.
விலை ரூ 1,50,000

கலக்க வருதுப்பா...

# கல்கி

ரீடர்ஸ் கெட் ரெடி!

## இப்ப சேலம் மாவட்டத்துக்கு வருது கல்கி டீம்...

- மல்கோவா மாம்பழம்
- தாரமங்கலம் சிற்பம்
- சேலம் இரும்பு உருக்காலை
- ஏற்காடு குளிர்ச்சி
- காவிரியின் வளமை
- ஸ்கந்தாஸ்ரமம் பிரம்மாண்டம்
- மேட்டூரின் முக்கியத்துவம்
- கே.பி.என். சேவை
- ஏலகிரி ஏலக்காய்
- மாடர்ன் தியேட்டர்ஸ் பாரம்பரியம்
- மத்திய சிறைச்சாலை வரலாறு


தாரமங்கலம் சிற்பம்

இன்னும் என்னவெல்லாம் இருக்கு? சேலம் மாவட்டத்தின் (+) (–) என்ன? எழுதி அனுப்புங்க...

வாசகர்களே!

உங்க மாவட்டத்தைப் பத்தி நீங்க அனுப்புற தகவல்கள்தான் கல்கி சேலம் மாவட்ட ஸ்பெஷல் இதழ்களுக்கு அஸ்திவாரம்!

# சேலம் மாவட்ட வாசகர்களே... திக்திப்பான அனுபவத்துக்கு ரெடியாகுங்க!

ஏற்காடு மலைவழிச் சாலை

விவரங்கள் அடுத்த பக்கத்துல இருக்கு!



ஆமாம்! உங்கள் சேலம் மாவட்டத்துக்கு 'கல்கி' டீம், நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

சில சிம்பிள் கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்புகள் மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்கு சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- சேலம் மாவட்டத்தின் பிரச்னைகளுக்கு - ✓ பெட்டிஷன் பாக்ஸ். ஆன்மிக, வியாபார, சுற்றுலாத் தலங்களின் சிறப்புக்கு - ✓ நியூஸ் ஏந்தி பவன். சிறுகதைகள், கவிதைகளுக்கு - ✓ வேடந்தாங்கல். நகைச்சுவைக்கு - ✓ ஜோக் ஃபால்ஸ்... என்றவாறு கூப்பனில் ✓ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசித் தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கலக்க வருதுப்பா கல்கி**

**சேலம் மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்

☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 25.10.2010**

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடுறோம்!









போட்டியில் பங்கேற்றவர்களில்
₹5 லட்சம் பரிசை வெல்லப்போவது யார்?

திங்கள் மற்றும் செவ்வாய் இரவு 9.00 மணிக்கு

காணத்தவறாதீர்கள்

